Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor:* P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீராமாநுஜன் 223

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி •
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி • —ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி •
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

28—6—1967ல் வெளியிட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் — 223







சென்னை ஸந்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 19 | ப்லவங்களு ஆடிமாதத்திற்காக 30-6-67ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 8 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி—98

திருமால் தன்பால் விருப்பம் செய்கின்ற நேர்கண்டு*
அருமாயத்தன் றகல்விப்பானென்—*பெருமால் நீ
இன்றென்பால்செய்வா னென்னென்ன இடருற்று நின்றான்*
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து.

| | |
|---|---|
| திருமால் தன்பால் | ஸர்வேச்வரன் தம்மிடத்து |
| விருப்பம் செய்கின்ற நேர் கண்டு | அதிகமான ஆதரம் செய்யும் படியைக் கண்டு |
| அன்று அரு மாயத்து அகல்விப்பான் என் | ‘(எம்பெருமானே!) இதற்கு முன்பெல்லாம் (என்னை) ப்ரக்ருதியிலே யிட்டுவைத்து அகற்றிவிடுவானேன்? |
| இன்று | இப்பொழுது |
| என் பால் | என்னிடத்தில் |
| நீ பெரு மால் செய்வான் என் | நீ மிக்க வியாமோஹத்தைச் செய்வானேன்?’ |
| என்ன | என்று (ஆழ்வார்) கேட்க, |
| தான் | (அப்போது) எம்பெருமான் தான் |
| துன்னு புகழ் | மிக்க புகழையுடையரான |
| மாறனை | அவ்வாழ்வாரை |
| சூழ்ந்து | வளைந்துகொண்டு |
| இடர் உற்று நின்றான் | (அவர் கேட்ட கேள்விக்கு விடை சொல்லமாட்டாமல்) தடுமாறி நின்றான். |

* * *—எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே அளவுகடந்த அபிநிவேசத்தைக் காட்டத் தொடங்கினான்; அதுகண்ட ஆழ்வார் ‘பிரானே! இன்றளவும் என்னைப் படுகுழியிலே தள்ளிவைத்து இன்று இங்ஙனே ஆதரிப்பதற்கு என்ன ஹேது? என்று

மடிபிடித்துக் கேட்க, அதற்கு ஒரு மறுமாற்றமும் சொல்லப் போகாமையாலே எம்பெருமான் தடுமாறி நின்றான்; என்பது *திருமாலிருஞ் சோலைமலை யென்றேனென்கிற திருவாய்மொழியிலருளிச் செய்யப்பட்டதாம். ஆசார்ய ஹ்ருதயத்தின் முடிவில் "இன்று அஹேதுகமாக ஆதரிக்கிற நீ அநாத்யநாதர ஹேது சொல்லென்று மடியைப் பிடிக்க" என்று தொடங்கி விரிவாக அருளிச்செய்துள்ள விஷயங்கள் இங்கே அநுஸந்தேயம்.

ஆழ்வாரைத் திருநாட்டுக்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோக எம்பெருமான் விரைந்தமை சொல்லிற்று *அருள்பெறுவாரடியாரென்னுந் திருவாய்மொழியிலே. அதற்குச் சிறிது இடையூறு விளைந்தது அடுத்த திருவாய்மொழியில்—ஆழ்வாருடைய திருமேனியிலே எம்பெருமான் அளவுகடந்த அபிநிவேசம் பண்ணி இத்திருமேனியோடே ஆழ்வாரைத் திருநாட்டுக்குக் கொண்டுபோவதாக முயல, ஆழ்வார் தம்முடலின் தண்மையை அப்பெருமானுக்கு அறிவித்துத் தடுக்க இவ்வழியாலே எம்பெருமானுடைய விரைதல் சிறிது தடைபட்டதாயிற்று. எம்பெருமானும் ஆழ்வாருடைய நிஷேதத்திற்கு இணங்கி நின்று இவர்க்கு விண்ணுலகம்தர விரைந்தானாகி வானேறும்வழியிலே கொண்டுபோவதாக முயன்றவளவிலே ஆழ்வார் அவனை மடிபிடித்து ஒரு கேள்வி கேட்கத்தொடங்கினார்; அதாவது, இன்று இப்படி பதறுகின்ற நீ அநாதிகாலம் என்னை இவ்விருள்தருமாஞாலப் படுகுழியிலே தள்ளியிட்டுவைத்து ஆறியிருந்தமை எங்ஙனே? இன்று இப்படி ஆதரிக்கைக்கும் அநாதிகாலம் அநாதரித்திருந்தமைக்கும் ஹேது சொல்லியருளவேணும் என்றார்; அவனும் என்ன ஹேது சொல்லலாமென்று பலவாறு சிந்தித்துப் பார்த்தான்: எதற்கும் ஆழ்வார் ப்ரதிகோடி சொல்ல வல்லவர் என்பதைத் தன்னில் தானுணர்ந்து நிரங்குச ஸ்வாதந்திரியத்தாலே செய்யுமதுக்கு ஹேதுவுண்டோவென்று ஆழ்வார் தாமே ஸமாதானமடைந்திடுகவென்று கருதி, ஒரு மறுமாற்றமுங் காணாமையாலே கவிழ்ந்து நின்று காலாலே தரையைக்கீறி நின்றான்; இது ஒரு நிர்ஹேதுக விஷயீகாரமென்று ஆழ்வாரறிந்து களித்துப் பேசுகிறதா யிராநின்றது—இப்பாட்டுக்கு மூலமான பதிகம். ❋

## ஸ்ரீ வைஷ்ணவதேவாலய தர்மபரிபாலனம்

—நமது பல நூல்களில் விரிவாக எழுதப்பட்டுள்ளவற்றின் ஸாரம்.—

1. எம்பெருமான் பஞ்சப்ரகார விசிஷ்டனாக சாஸ்த்ரங்களில் கூறப்படுகிறான். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்க ளென்னுமிவை பஞ்சப்காரங்களென்று ப்ரஸித்தம். ப்ரமேயங்களில் தலையான எம்பெருமான் தன்னை இங்ஙனே ஐந்து வகையாக வகுத்துக்கொண்டதுபோல ப்ரமாணங்களில் தலையான வேதமும் இவ்வைந்து ப்ரகாரங்களுக்குச்சேர தன்னையும் ஐந்துவகையாக வகுத்துக்கொண்டது. இதனை விவரிப்போம்.

2. எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை (1) பரத்வம் எனப்படும். க்ஷீராப்தியில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண வகுப்புண்டு நிற்கும் நிலை (2) வ்யூஹம் எனப்படும். ஸ்ரீராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்து நிற்கும் நிலை (3) விபவம் எனப்படும். *கரந்தெங்கும் பரந்துளன்* என்று உள்ளே பதிந்து நிற்கும் நிலை (4) அந்தர்யாமித்வம் எனப்படும். கோவில்களிலும்

க்ருஹங்களிலும் *தமருந்ததெவ்வுருவமவ்வுருவமாய் நிற்கும் நிலை (5) அர்ச்சாவதாரம் எனப்படும். இவை, ப்ரமேயபூதனை பகவானுடைய பஞ்சப்ரகாரங்கள்.

3. இனி, ப்ரமாணத்தின் பஞ்ச ப்ரகாரங்களைக் கேண்மின்: (1) வேதம் பல விடங்களிலும் எம்பெருமானுடைய பரத்வநிலையைப் பேசுகையாலே பரத்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை வேதம். (2) எம்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையின் குணம் ரூபம் க்ருத்யம் முதலானவற்றைப் பேசுகைக்காக வேதமே பஞ்சராத்ரமாக வடிவெடுத்த தாகையாலே, பகவானுடைய வ்யூஹாவஸ்தைக்குச் சேர்ந்த ப்ரமாண நிலை—பாஞ்சராத்ரம். (3) எம்பெருமானுடைய அந்தர்யாமித்வமானது அக்நி இந்திரன் வருணன் முதலான தேவதைகள் பக்கலிலே யுள்ளது; அவ்வோ தேவதைகளைக் குறித்து நாம் பண்ணுகிற கருமங்கள் அந்தர்யாமியான எம்பெருமானைச் சேருகின்றன வென்பது வேதாந்திகளின் கொள்கை. ஆகவே எம்பெருமானுடைய அந்தர்யாமித்வம் கருமானுஷ்டானத்திற்கு உரியதென்று தேறிற்று. அப்படிப்பட்ட கர்மகலாபங்களை விவரிக்க மநுஸ்மிருதி முதலான தரும சாஸ்த்ரங்களாக அந்த வேதமே அவதரித்த படியாலே, அந்தர்யாமித்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை—ஸ்மிருதிகள். (4) அப்பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசுவதற்காக அந்த வேதமே ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஆவிர்ப்பவித்த தாகையாலே எம்பெருமானுடைய விபவத்திற்குச் சேர்ந்த பிரமாண நிலை—இதிஹாஸ புராணங்கள். (5) விபவாவதாரங்களால் ரக்ஷித்தருளுமெம்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸுலபனாக அர்ச்சாவதாரமானவளவில் அதன் பலவகைப் பெருமையைப் பேசுவதற்காக அந்த வேதமே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாகத் தமிழ் வடிவாய்க்கொண்டு ஆழ்வார்கள் பக்கலிலே திருவவதரித்ததாகையாலே அர்ச்சைக்குச் சேர்ந்த ப்ரமாணநிலை—திவ்யப்ரபந்தம்.

4. ஸ்ரீராமாயண பாராயணம் செய்பவர்கள் யாவரும் *வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்து வருவது நிர்விவாதம். வேத ப்ரதிபாத்யனான பரம புருஷன் சக்ரவர்த்திதிருமகனாய் அவதரித்தவளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீவால்மீகி பகவானிடத்தில் நின்றும் ஸ்ரீராமாயணமாகத் திருவவதரித்ததென்று இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதை ஒரு ந்யாப சிக்ஷயாகக்கொண்டு நம்முடைய பூர்வாசார்யர்கள் நிர்வஹித்த கட்டளையை நாம் கீழே விவரித்தோம். ப்ராமாணிகர்கள் இதில் ஸந்தேஹிக்கவோ ஆக்ஷேபிக்கவோ இடமில்லை. பராத்பரனான எம்பெருமானுடைய பரத்வப்பெருமைகளை நாம் தெரிந்துகொள்ளவேண்டுமானால் வேதத்தைக்கொண்டு தெரிந்துகொள்ளவேண்டும். அப்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையில் விசேஷங்களைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் பாஞ்சராத்ரத்தைக்கொண்டு தெரிந்துகொள்ள வேண்டும். விபவாவதார வ்ருத்தாந்தங்களைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் இதிஹாஸ புராணங்களைக்கொண்டு தெரிந்துகொள்ளவேண்டும். அந்தர்யாம்யாராதநரூப கர்ம கலாபங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டுமானால் மநுஸ்ம்ருதி முதலிய தர்ம சாஸ்த்ரங்களைக்கொண்டு தெரிந்துகொள்ளவேண்டும். அர்ச்சாவதாரப் பெருமைகளைத்

தெரிந்துகொள்ளவேண்டுமானல் ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளாகிய திவ்ய ப்ரபந்தங்களைக்கொண்டே தெரிந்துகொள்ளவேண்டும். ஆகவே திவ்யப்ரபந்தங்கள் அர்ச்சாவதார வேதமென்று குலாவப்பட்டு வருகின்றன. உண்மையில், ராமகிருஷ்ணுதியவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களான நமக்குத் தஞ்சமான கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திவ்ய தேசங்களின் [நூற்றெட்டுத் திருப்பதிகளின்] அநுபவம் நமக்கு திவ்யப்ரபந்தங்களாலல்லது வேறொன்றினுலும் ஸாத்யமன்றே. ஆழ்வார்களோ திவ்ய ஸூரிகள். அவர்கள் பாடின நூல்களோ திவ்ய ப்ரபந்தங்கள். அப்பிரபந்தங்களுக்கு விஷயமோ திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாக அமைந்த அமைப்பு அற்புதமென்பதை யாரறிவார்?

5. ஆழ்வார் திவ்யப்ரபந்த மருளிச்செய்யாதிருந்தால் விஷ்ணுவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்கள் அந்தோ! அழகிழந்து கிடக்குமேயென்று கம்பர் சடகோபரந்தாதியில் *அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த அரும் பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும் தந்தம் விழாவு மழகு மென்னும்* என்கிற செய்யுளினுல் கல்வெட்டாகக் கூறியுள்ளார்.

6. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இதிஹாஸ புராணங்களை மிகவும் விசேஷமாக இயற்றியிருந்தும் அவர்களை எந்த இடத்திலும் எந்த கோவிலிலும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து ஆராதிப்பது காண்கின்றிலோம். விஷ்ணு கோவில் ஒன்று தப்பாமல் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து பகவானுடைய வைபவத்திற்காட்டிலும் அவர்களுடைய வைபவமே ஓங்கும்படி செய்திருப்பதைக் காண்கின்றோம். இப்படி ஆழ்வார்களை ப்ரதிஷ்டை செய்து ஆராதிக்குமிக் காரியம் ஏதோ ஸமீப காலத்தில் ஏற்பட்டதோ வென்று சங்கிக்க இடமில்லாதபடி ஸ்ரீ ராமாநுஜர் காலத்தில் அவதரித்த நூல்களில் இது பொறிக்கப் பெற்றுள்ளது. ஒன்றே எடுத்துக் காட்டுவோமிங்கு. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் உடையவர்காலத்தில் திருவவதரித்து உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தர் என்பது ஜகத்ப்ரஸித்தம். அவர் தாம் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் நாற்பத்தோராவது ச்லோகத்தில் *பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்* என்றுள்ளது. சந்திர புஷ்கரிணியின் கீழ்த்திசையில் ஆழ்வார்கள் பதின்மரும் பிரதிஷ்டை செய்யப்பட்டு எழுந்தருளியிருப்பதாக இதனுல் நன்கு விளங்குகின்றது. ஆகவே ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஸ்ரீரங்கம் கோவிலில் ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை பெற்றூர்களென்பது பேர்க்கவும் பேராதபடியுள்ளது. கீழே நாம் விரிவாக நிருபணம் செய்தபடி அர்ச்சாவதார வேதமாகிய திவ்ய ப்ரபந்தங்களுக்கே ஏற்றமானது பற்றியே விஷ்ணு வாலயங்களில் ஆழ்வார்களுக்கு இவ்வளவு வைபவம் அமைந்ததென்பதில் ஐயமில்லை.

7. பெரியார்கள் ஆழ்வார்களின் பாடல் பெருத விஷ்ணு கோவில்களில் பிரவேசிக்கத் தயங்குவது போலவே, ஆழ்வார்களின் விக்ரஹப்ரதிஷ்டையும் திவ்ய ப்ரபந்தாநுஸந்தானமுமில்லாத கோவில்களில் பிரவேசிக்கவும் தயங்குவர்கள். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளில் பிரவேசமில்லாதவர்களுக்கு மோக்ஷமே கிடையாதென்பதை

ஸ்ரீமத் வேதாந்தவாசிரியர் பாதுகாஸஹஸ்ரத்தில் கூசாது கூறுகின்றார். ஒரு ச்லோகமே இங்கெடுத்துக் காட்டுகின்றேன்; *த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணாய ரோசயிஷ்யந்* என்பது. இந்த ச்லோகத்தின் தாற்பரியமென்னவென்றால், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் பிரவேச பாக்யமில்லாதவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லையென்று எம்பெருமான் விரதம் கொண்டிருப்பவனும். இப்படியிருந்துவிட்டால் இவ்வுலகில் பலபல பேர்கள் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பை இழந்தே போகவேண்டிவரும். ஏனென்றால், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் தமிழ்ப்பாஷையில் அவதரித்திருப்பதாலும் அந்தப் பாஷையை அறியாதவர்களே உலகில் அதிகஸங்க்யையாக இருப்பதாலும் அவர்களெல்லாரும் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பைப் பெறுவதற்கு ப்ரஸக்தியில்லையாய் விடுகிறது. உலகில் ஒருவர் தப்பாமல் எல்லாருமே எம்பெருமானுடைய இன்னருளுக்கிலக்காகி உய்வு பெறவேண்டுமென்று விசாலமான திருவுள்ளங்கொண்ட நம்மாழ்வார் ஒரு உபாயம் செய்தாராம். அவர் பகவானுடைய பாதுகையில் ஆவேசித்து சடகோபனென்றும் சடாரியென்றும் தம்முடைய திருநாமத்தையே பாதுகைக்கு ஆக்கி, பெருமாளருகே வருகிற எல்லாருடைய தலையிலும் ஏறி வீற்றிருந்து, இவ்வழியினாலே எல்லாரும் ஒருவாறு ஆழ்வார் ஸம்பந்தம் பெற்றவர்களாகி உஜ்ஜீவிக்கும்படி செய்துவிட்டாராம். இப்படியருளிச்செய்தவர் வேதாந்தவாசிரியர். இதனால், ஏதேனுமொரு விதமாக ஆழ்வாருடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதியுண்டென்றும் அது பெருதவர்களுக்கு ஸத்கதிகிடையாதென்றும் ஸ்ரீவைஷ்ணவ பரமாசார்யர்களின் ஸித்தாந்தம் கல்வெட்டாக இருந்ததென்று யாரும் காணலாம். எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஆழ்வார் திருநாமமன்றோவுள்ளது.

8. இப்படி ஆழ்வார்களாலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளாலுமே மேன்மை பெற்ற விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலனம் செய்யுமதிகாரபதவியை ஆளுமவர்கள் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் எதுவென்பதை இனி நாம் விவரிக்கவேண்டிய அவசியமுளதோ? ஆழ்வார்களின் திருநக்ஷத்ரபரிபாலனாதிகள் செவ்வனே நடைபெறுகின்றனவா? என்பதையே முக்கியமாக முன்னம் கவனிக்கவேண்டும். அவ்வாழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை ஓதுமதிகாரம்பெற்ற பெரியார்களைப் புரஸ்கரிக்கவேண்டிய முறைகளில் வழுவொன்றும் நேராதபடி கவனித்துக்கொள்ளவேண்டியதும் மற்றொன்று. இப்போது விஷ்ணுவாலயங்களில் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவர்களல்லாத ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி பதவியில் நியமனம் பெறுகிறார்கள். உண்மையில் இவர்கள் விஷ்ணுத்வேஷ மற்றவர்களாயும் விஷ்ணு பக்தியுக்தர்களாயுமிருப்பதால் விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலக பதவிக்கு உரியவர்களேயாவர். ஆனால் இவர்கள் தங்களுடைய உரிமையை முழுது முணர்ந்து செவ்வனே செலுத்துதல் வேண்டும். ஆழ்வார்களிடத்திலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிடத்திலும் ஸ்ரீஸூக்தி வல்லவர்களிடத்திலும் இவர்களுக்கு ஸ்வத; பக்தியிருக்கக் காரணமில்லை. ஆனாலும் ஆலய தர்ம பரிபாலனஞ்செய்ய சம்பளம்பெற்று வந்துவிட்டபடியால் அந்தந்த ஆலயங்களின் நிபந்தனைகளுக்குப் பணிந்து ஒழுங்கான முறையில் நடக்க வேண்டியது கடமையாகும். ஒரு பெண் ஒருவர்க்கு இரண்டாவது மனைவியாக வாழ்க்கைப்படுகிறாள். இறந்துபோன மூத்தமனைவிக்குச் சிலமக்கள் இருந்தால் அந்த ப்ரஜைகளின் போஷணையும்

இப்பெண்ணுக்கே கடமையாகிறது. உண்மையில் அந்த ப்ரஜைகளிடத்தில் இப்பெண்ணுக்கு அன்புநிலை அஸம்பாவிதமானாலும் கைப்பிடித்த கணவனது முகமலர்ச்சிக்காக அந்த ப்ரஜைகளிடத்தில் மிக்க அன்புகாட்டிக் கணவனோடொப்ப அக்குழந்தைகளையும் போஷித்து நல்ல புகழ் பெறுகின்றாள். அதே முறைமையை இங்கும் ஆவாஹனம் செய்துகொள்ளவேண்டும்.

9. ப்ராமாணிகர்களாய் கம்பீரப்ரக்ருதி வாய்ந்தவர்கள் தாம் ஏற்றுக்கொண்ட பதவியைச் சிறிதும் பழிப்புக்கிடமில்லாதபடியே யசஸ்கரமாக நடத்திக்கொண்டு வருகின்றார்கள். ஒரு நிதர்சனம் காட்டுகிறோம். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே அஸாதாரணமான திவ்யப்ரபந்த பாராயணம் முதலிய சிலவிஷயங்களில் வழக்குகள் உண்டாகி நியாயாலயங்களுக்குப்போக நேர்ந்திருக்கிறது; முன்ஸீப் கோர்ட்டு ஜில்லாகோர்ட்டு ஹைகோர்ட்டு பார்லிமெண்டு என்னப்படுகிற எல்லா நீதி மன்றங்களிலுமே ஷ வழக்குகள் சென்றிருக்கின்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் வழக்குகளைப் பரிஷ்காரம் செய்தவர்கள் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவரல்லாதாரும் ப்ராமணரல்லாதாருமே. அவர்களெல்லார்க்கும் திவ்யப்ரபந்தங்களில் அப்ரதிபத்தியும் விப்ரதிபத்தியும் பரிபூர்ணமாகவுண்டு. கோவில்களில் திவ்யப்ரபந்த பாராயணங்களை அறவே நீக்கிவிடவேணுமென்கிற அபிப்ராயமுடையாரது வகுப்பில் சேர்ந்தவர்களே அவர்கள் பெரும்பாலும். ஆயினும், நீதிபதி ஸ்தானத்தை வஹிக்கின்ற நாம் நியாயப்பழுதாக நடந்து கொள்வது கூடாது என்கிற தருமத்திற்குக் கட்டுப்பட்டே அவர்கள் திவ்யப்ரபந்தங்களுக்கு விஷ்ணுவாலயங்களிலுண்டான கௌரவத்தைச் சிறிதும் போக்காமல் அநாதியான வழக்கங்களை உண்மையான ரிகார்டுகளினாலும் பல முகாந்தரங்களினாலும் தெரிந்து கொண்டு நீதி நன்னெறியையே செலுத்தியுள்ளார்கள். திவ்யப்ரபந்த பாராயண விஷயமாக கோர்ட்டுகளில் வழக்கு உண்டாகப்பெறாத விஷ்ணுவாலயங்கள் சில சிலவேயாகும். உண்டான வழக்குகளைத் தீர்த்தவர்கள் ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் ஹூணர்களும் யவனர்களும் கிறிஸ்துவர்களுமே பெரும்பாலுமாவர். அவர்கள் தங்களுடைய சொந்தக் கொள்கைக்கு மதிப்புக்கொடுத்து நீதிநன்னெறியில் நின்றும் விலகி ஜட்ஜ்மெண்டுகள் எழுதியிருந்தார்களாகில் திவ்யப்ரபந்தங்கள் மறைந்தே போயிருக்கும், அவ்வதிகாரிகள் யாவரும் திவ்யப்ரபந்தமே அர்ச்சாவதாரவேதமென்கிற உண்மையை உள்ளபடி உணரப்பெற்று எள்ளளவும் நியாயவிபரீதம் செய்யாமல், தங்களுடைய சொந்தக் கொள்கையை வெகுதூரத்தில் விலக்கி உண்மையான நீதிபதிகளாய் நடந்து கொள்ளவேதான் திவ்யதேசங்களில் திவ்ய ஸூரிகளின் பெருமைகளும் திவ்ய ப்ரபந்தங்களின் பெருமைகளும் "படிக்குப் பாதி" என்கிற முறையிலாவது விளங்கிக் கொண்டிருக்கின்றன.

10. அப்படிப்பட்ட ஆலயங்களுக்கு தர்ம நிர்வாஹகர்களாய் நியமிக்கப்பட்டு வந்து வேலை பார்க்கின்ற டிரஸ்டிகளும் அந்த நியாயத்திற்குக் கட்டுப்பட்டு அந்தப் பெருமைகளுக்குச் சிறிதும் குறை ஏற்படாதபடிக்கு தர்ம பரிபாலனஞ் செய்துபோக வேண்டியதே கடமையாகும்.

11. திவ்ய தேசங்களுக்கு மிக முக்கியமான திவ்ய ப்ரபந்த பாராயணம் ஆங்காங்கு மலினமாகி வருகின்றது. உபபத்தி குறைவான தேவஸ்தானங்களில் எது எப்படி நடந்

தாலும் விசாரமில்லை. நல்ல உபபத்தியுள்ள ஸன்னிதிகளில் விசேஷ காலங்களில் ஆயிரக் கணக்கில் செலவு செய்து நாதஸ்வரக் கச்சேரியென்றும், பாட்டுக் க்கச்சேரியென்றும் நடத்தி வீண் டம்பங்கள் செய்யப்பார்க்கிற அதிகாரிகள் "விஷ்ணுவாலயங்களுக்கு முக்கிய மான சிறப்பு திவ்ய ப்ரபந்த பாராயணமாயிற்றே, அதனையன்றோ நாம் முதன் முதலாகக் கவனிக்கவேண்டும்; அந்த ஸம்ருத்திக்குப் பிறகல்லவோ மற்ற ஸம்ருத்திகளைப் பார்க்க வேண்டும்'' என்று சிறிதும் நினையாமல் அதை அடியோடு மறந்து, பாமரலௌகிகர்கள் தலையாட்டுவதற்கு வேண்டிய வழிகளில் வீணான டம்பச் செலவுகளைச் செய்துவருகிறார் களேயென்கிற பரிதாபமே முக்கியமாக இந்த வியாஸமெழுதத் தூண்டிற்று.

12. சில திவ்ய தேசங்களில் வந்து சேருகிற டிரஸ்டிகள், கீழே நாம் விரிவாக விவரித்த நீதிகளிலே சிறிதும் மதி செலுத்தாமல், தங்களுடைய இயற்கைக் கொள்கைக்கே மதிப்பு கொடுத்து "திவ்ய ப்ரபந்த மென்பது தமிழ்ப்பாட்டுத்தானே'' என்று ஸாமான்ய மாக நினைத்து அதனிடத்திலும் அதையோதுமவர்களிடத்திலும் அநாதரம் காட்டுமது கண்டு அவர்களுக்கு உண்மையான தமிழ்வேதப் பெருமையைக் காட்டவேண்டியும் இந்த வியாஸம் எழுதப்புகுந்தது. திவ்ய தேசங்களுக்குக் கீழே விவரித்த பெருமைகள் தவிர மற்றொரு பெருமையும் இங்குத் தெரிவிக்கிறோம். ஆங்காங்கு கோவில்களில் எம்பெரு மான்களுக்கு வழங்கிவரும் திருநாமங்கள் பெரும்பாலும் ஆழ்வார்களின் திருவாக்கிலிருந்து அவதரித்தவைகளே அன்றுதொடங்கி ஆதரிக்கப்பட்டு வருகின்றன. ஒரு பெருமானை (திருக்குடந்தையில்) ஆராவமுதே! என்று ஆழ்வார் விளித்தார். இந்தத் திருநாமம் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி தவிர வேறெங்குங் கிடையாது. இதுவே அந்த பகவானுக்கு உகப்பாகி இதை ஸம்ஸ்க்ருதப்படுத்தி அபர்யாப்தாம்ருதமென்கிறார்கள். ஆழ்வார் நாகைப் பட்டணமென்கிற திருநாகைக்கு எழுந்தருளி அவ்வூர்ப்பெருமாளுடைய அழகிலேயீடு பட்டு அச்சோவொருவர் அழகியவா! என்று ஒருகாலைக்கு ஒன்பதின்காற் சொன்னார்; இதைக்கொண்டே அப்பெருமாளுக்கு ஸௌந்தர்யராஜனென்று திருநாமமிட்டனர். ஆழ்வார் திருப்புட்குழியெம்பெருமானைப் பாடுகையில் "புட்குழியெம் போரேற்றை" என்றார்; போரேறு என்கிற தமிழ்த் திருநாமத்தையே வடமொழியில் ஸமரபுங்கவ: என்றாக்கினர். மலையாளத்தில் திருச்சிற்றாறு என்கிற திவ்ய தேசத்தில் சென்று பெருமாள் திருநாமம் என்னவென்று போத்திகளைக் கேட்டால் "இமையவரப்பனென்னப்பன்'' என்று உங்கள் ஆழ்வார்கள் பாடின திருநாமந்தான் என்கிறார்கள். திருக்கண்ணமங்கை யிற்சென்று பெருமாள் திருநாமமென்னவென்று கேட்டால் ப்ருஹத்பஹிஸ்ஸிந்துநாதன் என்கிறார்கள்; பெரும்புறக்கடலை என்று திருமங்கையாழ்வார் திருவாக்கில் வந்ததையே வடமொழிப்படுத்திவிட்டார்கள். இந்த வகையில் தெரிவிக்கவேண்டிய விசேஷங்கள் பல பலவுண்டு. நம் தேவப்பெருமாளுக்கு வழங்கிவரும் பேரருளாளனென்னுந் திருநாமமும் ஆழ்வார் திருவாக்கில் வந்ததுபற்றியே கொள்ளப்பட்டது.

13. ப்ரஸங்காத், காஞ்சீபுரம் ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தைப் பற்றிச் சிறிது பேசுகிறோம். இந்த தேவஸ்தானத்தில் சில காலம் ஏகதேசமாக தர்ம கர்த்ரு பதவியை வஹித்து வந்த தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்ம பரிபாலனங்களை ஒழுங்கு பாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும்

சுமார் 60 வருஷங்களுக்குமுன் வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. அது 55 வருஷங்களுக்கு முன் சென்னை ஹைகோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது. எங்ஙனேயென்னில், தாதாசார்ய வம்சஸ்தர்களில் ஐந்து பேர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்கவேண்டுமென்றும், ஒவ்வொரு வருஷத்தில் ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்திவர வேண்டியதென்றும், இவர்கள் அதீநியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை செய்து நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்கு மேல் ஒரு ஸூபர்விஷன் போர்டு இருக்கவேண்டியதென்றும், அந்த போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர், (தாதாசார்யரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும்; அவசியம் நேருங் காலங்களில் இந்த ஸ்கீமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும் முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் பதினைந்து வருஷகாலம் நடந்து வந்தது.

14. அதிலும் தரும நிர்வாஹங்கள் மிகவும் சீர்கேடாகவேயிருந்ததனால் மறுபடியும் ஸ்கீம் மாடிபிகேஷன் செய்யப்படவேணுமென்று (தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களால்) வியாஜ்ஜியம் தொடுக்கப்பட்டது. அப்போது சுமார் பத்து வருஷகாலம் ஷை தாதாசார்ய வம்சஸ்த தர்மகர்த்தாக்கள் அறவே விலக்கப்பட்டு ஸ்மார்த்த ப்ராஹ்மணரொருவர் ரிஸீவராக ஜில்லா கோர்ட்டாரால் நியமிக்கப்பெற்று தேவஸ்தான பரிபாலனம் நடந்து வந்தது. அந்த வியவஹாரமானது விசேஷபலனைப் பெறுவியாமலே முடிந்துவிட்டதனுல் மறுபடியும் ஷை தாதாசார்ய வம்சஸ்தர்களே ஐந்து பேர்கள் தர்மகர்த்தர்களாக இருந்துவர நேர்ந்தது. வாதிகளான தென்கலையார்களால் சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டிருந்தது. அந்த அப்பீல் (A. S. 175 of 1939) 17-1-1941 தேதியில் கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் ப்ரஹ்மஸ்ரீ. கனம் ஜட்ஜ் பதஞ்சலிசாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவின் ஸாராம்சங்களை மேலே விளக்கிக் காட்டுகிறோம்.

15 ஷை தாதாசாரியர்களுக்குண்டான இந்த தர்மகர்த்ருத்வஹக்கானது பரம்பரை மிராசா? அன்று? என்கிற ஒரு வியாஜ்ஜியமும் (O. S. 8 of 1940) தனிப்பட நடந்தது. பரம்பரை மிராசுதான் என்று முன்னம் ஜில்லாகோர்ட்டில் முடிந்திருந்தது. அதன்பேரில் தென்கலையார் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள, பரம்பரை மிராசு அல்ல என்று தீர்மானிக்கப்பட்டுக் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பு வலிதாக மறுக்கப்பட்டது.

16. கடைசியான முடிவு என்னவென்றால்; ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் (ஸ்மார்த்தர் அல்லது மாத்வர்) ஸர்வாதிகார ஸம்பந்நரான மானேஜிங் டிரஸ்டியாக சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டும். தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிக வைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனம். தாதாசார்ய வம்சஸ்தர்களில் கீழண்டை வகுப்பிலும் மேலண்டை வகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான (அதிகாரமுமின்றிக்கே நாமமாத்ரமான) (ஹானரரி) டிரஸ்டிகளாக இருக்கவேண்டியது. மானேஜிங் டிரஸ்டியின் நடவடிக்கைகளின்மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்தது. ஷை ஸ்கீம் கேஸ் அப்பீல்

வாதிகளான (அடியேன்) ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் முதலான (ஏழு) தென்கலையார்களுக்கு கோர்ட்டு காஸ்டு சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்தவேண்டியது என்பது தீர்ப்பின் ஸாராம்சம்.

17. ஷி தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டவளவில், அப்போது தர்மகர்த்தாக்களாக இருந்து வந்த தாதாசாரியர்கள் "நாளது வைகாசி மாதத்தில் நடைபெற வேண்டிய ப்ரஹ்மோத்ஸவம் வரையில் நாங்களேயிருந்து அனுபவித்துவிட்டு உடனே விலகிப்போய் விடுகிறோம்; கோர்ட்டார் தயவுசெய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்க வேணும்" என்று கேட்டுக்கொண்டார்கள். அதைக் கோர்ட்டார் சிறிதும் அநுமதிக்கவில்லை. "நாளது மார்ச்சு மாதம் 17உக்குள் இந்த ஆர்டர் ஆசாரத்திற்கு வர வேண்டியது அவசியம்" என்று முடிவு செய்திட்டார்கள். அப்படியே அன்று முதலாகவே ஆசாரத்திற்கு வந்துவிட்டது.

18. பகவத் ஸந்நிதிகளில் தர்மகர்த்தாக்கள் என்கிற பதவி கிடைப்பது ஸாமான்யமல்ல. ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயன் என்னவேணும். அப்படி அலப்ய லாபமான பதவியைப் பெற்றவர்கள் உண்மையில் தர்மகர்த்தாக்களாகவே இருந்து வந்தால் ஒரு பங்கமுமடையாமல் நீடூழி வாழ்வர்களென்பதில் ஐயமில்லை. தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டுவந்து சேர்ந்த அன்றைக்கே தர்மஹர்த்தாக்களாகத் துணியுமவர்களைப் பற்றி நாம் இங்குத் தெரிவிக்கவேண்டியது என்ன இருக்கிறது? ஸ்ரீ காஞ்சீ வரதராஜன் தேவஸ்தானமானது பலவகையிலும் ப்ரஸித்தி பெற்றது. இதற்கு நிகரான திவ்ய தேசம் வேறொன்றில்லையென்றே சொல்லலாம். இப்படிப்பட்ட திவ்யதேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்களுக்கு உரிய லக்ஷணங்கள் நெடுநாளாக மிகவும் பங்கமடைந்திருந்தன. ஆழ்வார்களுக்கு திருநக்ஷத்திரங்கள் கொண்டாடுவதும், பகல் பத்து, இராப்பத்து என்கிற அத்யயனோத்ஸவத்தை விபவமாக நடத்துவதும் முதலியவை விஷ்ணுவாலயங்களுக்கு விசேஷ லக்ஷணங்கள் என்பது நாம் சொல்லவேண்டுமோ? ஆழ்வார்கள் இருக்குமிடம் தெரியாமல் மூலையிலொடுக்கி வைத்திட்டு, அவர்களுடைய ஸந்நிதிகளின் வாசல்களில் மண் சுவரெழுப்பி முள்ளடைத்து..............இப்படியாகச் செய்து வைத்திருந்தார்கள் முன்னேயிருந்த டிரஸ்டிகள். கோஷ்டியின் பெருமைகளோ, ஆழ்வாராசார்யோத்ஸவ பரிபாலன வைபவங்களோ எல்லாம் ஒரு வகுப்பினருடைய பெருமையாகவே யிருக்கின்றனவென்கிற நிர்வேதத்தினால் தேவாலய லக்ஷணங்களையெல்லாம் சீர்குலைத்து நடத்திவந்தார்கள். மணவாளமாமுனிகளில்லாமல் அத்யயனோத்ஸவம் நடத்தக்கூடாதென்கிற நியாயாலயத் தீர்ப்பு இருந்ததனாலே அறுபதெழுபது வருஷகாலம் அத்யயனோத்ஸவத்தையே அடியோடு அடக்கியிருந்தார்கள். இப்படிப்பட்ட சில்விஷமங்கள் பன்னியுரைக்குங்கால் பாரதமாம்

19. ஆதியில் தாதாசார்ய வம்சத்தவர்களுக்கு ஏற்பட்ட பெருமைகளெல்லாம் மணவாளமாமுனிகளிடத்தில் பக்தி ஸம்பத்தினாலேயே என்பது அவர்களின் உள்ளமுணர்ந்த உண்மை. என்றைக்கு இவர்கள் மணவாளமாமுனிகளிடத்தில் பகை கொண்டு நடக்க ஆரம்பித்தார்களோ அன்றைக்கே இவர்களுடைய ஸ்ரீ க்ஷயிக்கத் தொடங்கிற்று. ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியில் இவர்களுக்கு எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன ! காஞ்சி க்ஷேத்திரத்து ஸகல தேவாலயங்களிலும் எப்படிப்பட்ட

மரியாதைகள் இருந்தன! அந்தோ! எல்லாமழிந்தன. இவ்வளவுக்கும் யாது காரணமென்பதை ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத (ஸ்மார்த்தர்களான) மத்யஸ்த அதிகாரிகள் உள்ளபடியே கண்டறிந்து சிலாசாஸநம்போல் எழுதிவைத்திருக்கின்றார்கள். ஸ்ரீபெரும்பூதூர் ஸந்நிதி விஷயமாக ஹைகோர்ட்டார் அவதரிப்பித்த ஜட்ஜ்மெண்டில் சிறந்த ஆராய்ச்சியுடன் அழுத்தமாக எழுதிவைத்திருக்கிற வாசகம் அச்சாகி வெளிவந்துள்ளது. மேலே நாம் எழுதியுள்ளதுதான் அதில் ஸாரமாகவும் வியக்தமாகவுமுள்ளது.

20. தேவப்பெருமாள் ஸன்னிதியை ஆண்டுவந்த பழைய டிரஸ்டிகள் ஷ ஸன்னிதியில் மணவாளமாமுனிகளுக்கும் மற்றுமுள்ள ஆழ்வாராசாரியர்களுக்கும் இழைத்த தீங்குகள் உண்மையாகவே ராமாயணமும் பாரதமும் போன்றவை. அவை பல புத்தகங்கள் மூலமாக வெளிவந்துமிருக்கின்றன. கோர்ட்டு ரிகார்டுகளிலும் ஏறிக்கிடக்கின்றன. அப்படிப்பட்ட தீங்குகள் அற்றொழியவேணுமென்றே இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பிராமணர்கள் அதிகாரம் செலுத்தும் டிரஸ்டியாக நியமிக்கப் பட்டார்கள். 17—3—41 தேதி முதலாக மேலே குறித்த பிராமணர்களின் அதிகாரத்திலேயே இந்த தேவஸ்தான நிர்வாஹம் நடைபெற்று வருகின்றது. ஆழ்வாராசார்யர்களின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனங்களும் அத்யயநோத்ஸவமும் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவமும் இந்த தேவஸ்தானத்தில் பல வருஷங்களாகவே நிறுத்தப்பட்டு அதுவே ஒரு மாமூலாக வந்திருந்தபடியால் மத்யஸ்தர்களான புது டிரஸ்டிகள் நியமிக்கப் பட்டுங்கூட அநாதிமாமூல்படி உத்ஸவாதிகளை நடத்த ஸௌகரியமில்லாமல் போகவே அவைகளுக்காகத் தனி வியாஜ்ஜியங்கள் நடத்தி அநாதி மாமூல்கள் அநேகமாகப் புதுப்பிக்கப்பட்டன. அவை சில வருஷ காலமாகவே ஒழுங்காக நடந்து வருகின்றன. அவை நடக்க ஆரம்பித்த பிறகுதான் இந்த தேவஸ்தானத்தை விஷ்ணுவாலயமென்று சிறப்பித்துச் சொல்ல அவகாசமுண்டாயிற்று. ப்ரஹ்மஸ்ரீ S. நரஸிம்ஹய்யரவர்களென்பவர் இவ்வாலயத்தில் சில வருஷங்கள் எக்ஸ்கியூடிவ் டிரஸ்டியாயிருந்து நல்ல புகழ் பெற்றார். ஆத்மஸ்துதி பரநிந்தை முதலான தீயகுணங்கள் அவரிடம் இடம் பெறாமலிருந்தன. ஸகல பக்தர்களும் அவரையே அடிக்கடி நினைக்கிறார்கள்.

21. தேவப்பெருமாள் தேவஸ்தானத்தில் அநாதியாக நடைபெற்றுவரும் காரியங்களெல்லாம் திவ்ய ப்ரபந்த கோஷ்டிக்கு ஆதிக்யங்கொடுத்தே நடந்து வருகின்றனவென்பதையும் சிறிது மூதலிக்கிறோம். வைகாசி மாதத்தில் நடைபெறும் வஸந்தோத்ஸவம் ஏழு நாட்களிலும் தேவஸ்தான திட்டமாக வஸந்தமும் சந்தனமும் விநியோகம் செய்வது வழக்கம். பெருமாள் ஸன்னிதி வீதி யெழுந்தருளித் திரும்புகையில் திருவடி ஸன்னிதி வாசலில் திவ்ய ப்ரபந்த கோஷ்டி தொடங்கும் போதுதான் அவை விநியோகஞ்செய்வது நாளைக்கும் வழக்கம். இங்ஙனே பலபல விஷயங்கள் தெரிவிக்கவேண்டியவையுண்டு. அவை மேலே (17 to 19 பக்கங்களில்) மாச்சரியமற்றமதியுடன் காணத்தக்கவை.

22. தாதாசாரியர்களின் மூலபுருஷர்கள் ஆதியில் தென்கலையார்களாகவேயிருந்தனரென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. அவை நம்மால் வெளியிடப்பட்டுமிருக்கின்றன. இதனால்தான் இவர்களுக்கு இத்தேவஸ்தானத்திலும் இத்தகைய வேறு சில தேவஸ்தானங்களிலும் முக்கியமான சில மரியாதைகள் இருந்தன. இவர்கள் கலை

மாறினபிறகும்கூட பலவாண்டுகள் கோவில் மாமூல்படியே தங்கள் சொந்த கிருஹங்களிலும் சுபாசுப சந்தர்ப்பங்களில் மணவாளமாமுனிகளின் தனியனேயே ரக்ஷித்து வந்தார்கள் என்பது கோர்ட்டு ரிகார்டுகளினுல் விளங்கும். இதை யொட்டியே இவர்களுக்கு ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் தர்மகர்த்ருத்வம் ஏற்பட எம்பெருமான் சங்கற்பித்தான். ஆனுல் இவர்கள் ஸஹவாஸ தோஷத்தினுல் இக்கோயிலில் ஆழ்வார்கள் ஸந்நிதி விஷயத்திலும் அருளிச்செயல் அநுஸந்தான விஷயத்திலும் பலவித அபசாரங்கள் பட ஆரம்பித்ததிலிருந்து இவர்களுடைய ஸ்ரீயானது குறையத் தொடங்கி கடைசியில் தேவஸ்தான முழு நிர்வாஹமும் பொது பிராஹ்மணர்களின் கைக்கு மாறியது.

23. வடகலையார்களுக்குப் பொதுவாக ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயல் விஷயத்திலும் ப்ரதிபத்தி கிடையாதென்பது கோர்ட்டு தீர்ப்புகளினுல் விளங்கக் கூடிய விஷயம். திருப்பதி அத்யாபக வியாஜ்ஜியத்தில் (1947- I. M. L. T. Page 159) இதைப் பிரிவிகௌன்ஸில் கனம் ஜட்ஜிகள் குறிப்பிட்டுள்ளனர். இதற்கு முன்னமேயே, ஹூ 1875ல் செங்கல்பட்டு ஜில்லா கலெக்டராகவிருந்த M. Crole. என்னும் துரையால் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தில் (Chingleput District Manual) இதைக் காணலாம். வடகலையார்களில் சிறந்த படிப்பாளியாக விருந்து சில வருஷங்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜாகவுமிருந்த ஸ்ரீ V. V. ஸ்ரீனிவாஸய்யங்கார், 22—7—1938ல் வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் வடகலையார்களுக்கு ஆழ்வார்களிடத்திலும் திவ்ய ப்ரபந்தங்கள் விஷயத்திலும் ப்ரதிபத்தியில்லாமலிருப்பது சோசநீயம்; இதில் இவர்கள் இனிமேலாவது ச்ரத்தை கொள்ள வேண்டும் என்று எழுதியுள்ளார். ஆயினும், செங்கல்பட்டு ஜில்லா கோர்ட்டில் நடந்த (O. S. No. 7. of 1945) ஒரு வியாஜ்ஜியத்தில், காஞ்சீபுரம் வடகலையார்களுள் தற்கால தலைவர்களாய் விளங்கும் ஸ்ரீ R. வரத தாதாசாரியரும் ஸ்ரீ P. ஸுதர்சன தாதாசாரியரும், ஆழ்வார்களின் தமிழ்ப் பிரபந்தங்கள் ஸ்த்ரீகளுக்கும் சூத்திரர்களுக்குமே உரியன வென்று கை கூசாமல் ப்ரமாணம் செய்துள்ளனர். இதை எடுத்துக்காட்டி, சமீபத்தில் நடந்த ஒரு வியாஜ்ஜியத்தில் (O. S. No. 30 of 1956.) செங்கல்பட்டு சப் ஜட்ஜி (ஜட்ஜ்மெண்டு பாரா 20ல்) தமது மனதுக் கெட்டியவரையில் வடகலையார்கள் தமிழ்ப் பிரபந்தங்களை ஸேவிக்க உள்ளூர ருசி கொண்டிரார்களென்று எழுதியுள்ளார். இத்தகைய சான்றுகளினுல், திவ்ய ப்ரபந்தங்களில் பாடல் பெற்றுள்ள பெருமையினுலேயே திவ்ய தேசங்கள் என்று விளங்கும் கோயில்களுக்கும் வடகலையார்களுக்கும் இடையில் எவ்வளவு தூரமுள்ள தென்பதை மத்தியஸ்தர்கள் அறியலாம். தாதாசார்யர்கள் இதர தீவிர வடகலையார்களுடன் சேர்ந்துகொண்டு ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயல் விஷயத்திலும், முக்கியமாக இவைகளை மிகமிக விளங்கச் செய்த மணவாள மாமுனிகள் விஷயத்திலும் அபரிமித அபசாரங்கள் பட்டதின் காரணத்தினுலேயே தேவஸ்தான நிர்வாஹத்தை யிழக்கும்படி எம்பெருமான் ஸங்கல்பித்துள்ளான் என்பதை நாம் பலதடவை சொன்னுலும் புநருக்தியாகாது.

24. இந்த வியாஸத்தை இப்போது ஒருவாறு உபஸம்ஹரிக்கிறேன். பலவகையிலும் சிறப்புப் பெற்ற இந்த தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் கலா வைஷம்ய ப்ரயுக்தமான கலஹமொன்று மட்டும் இடம் பெருதிருந்தால் இதுதான் பூலோக வைகுண்டமென்னத் தகும். தேவப்பெருமாள் அவதரிக்கும் போதே கலஹந்தான் முற்பட்டதென்று புராணம்

பகர்கின்றது. அது இப்படியும் அநுவர்த்திக்க வேணுமா? லீலா விபூதியில் இதுவுமொரு லீலை போலும் பேரருளாளனுக்கு. சிங்கம் புலி கரடி சிறுத்தை முதலிய மிகக் கொடிய மிருகங்களோடும் அவலீலையாகப் பழகி வாழ்கின்றவர்களைப் பார்க்கிறோம். ஸ்ரீவைஷ்ண வர்கள் கலந்து பழகி வாழமுடியவில்லை யென்றால் இதனிலும் மிக்க துர்தசையுண்டோ வைணவமதத்திற்கு? இந்த தேவஸ்தானத்தில் பலபல வியவஹாரங்கள் [வியாஜ்ஜியங்கள்] தோன்றியிருந்தாலும் முக்கியமானவை இரண்டே யென்னலாம். ஒன்று மணவாள மாமுனிகள் ஸன்னிதி விஷயம். மற்றொன்று அத்யாபக கைங்கர்ய விஷயம். இவ்விரண்டும் நீதிமன்றங்களில் பரிபூர்ணமான பரிஸமாப்தியை யடைந்துவிட்டன. இந்த தேவால யத்தில் மணவாளமாமுனிகள் திருக்கோலம் கிடையவே கிடையாதென்றும், உண்டென் றாலும் மூல விக்ரஹ மொழிய உத்ஸவ விக்ரஹம் கிடையவேகிடையாதென்றும், அதுவுமுண்டென்றாலும் அந்த விக்ரஹம் இடம்விட்டுப் பெயரவே கூடாதென்றும்...... இப்படி விசித்திர விசித்திரமான வியவஹாரங்களை மஹா விவேகிகளெனப்பட்டவர்களும் கிளப்பி நடத்திவந்தார்கள். இதுஸம்பந்தமான எல்லாச் சச்சரவுகளும் தொலைந்து ஸுபிக்ஷமான காலத்திலே நாம் வாழ்கிறோம். பொலிக! பொலிக!! பொலிக!!!

25. அத்யாபக கைங்கர்ய விஷயமான வியவஹாரங்களும் பலகால் பலவிதமாக முளைத்து முளைத்து எத்தனை நீதிமன்றங்களுண்டோ அத்தனையிலும் அலம்பிக்கவிழ்த் தாயிற்று. இவ்வூரிலும் வெளியூர்களிலும் எத்தனை வடகலையாருண்டோ அத்தனை பேரும் இயல் கோஷ்டியில் கோர்ட்டு சட்டங்களுக்கடங்கி வந்தால் நல்வரவே கூறுவோம். திவ்ய ப்ரபந்த விஷயத்தில் உதாஸீனர்களான ஸ்மார்த்தர்கள் திவ்ய ப்ரபந்தங்களை யதிகரித்து ஸேவிக்கவந்தால் திவ்யப்ரபந்தத்தில் உண்மையான ஆர்வமுள்ளவர்கள் ஆனந்தம் பூரித்து நிற்பது தவிர வேறு என்ன செய்வர்கள். 'நமக்கு வேதபாராயண கோஷ்டியே வேண்டாம், எல்லாரும் இயல் கோஷ்டியில் 3, 4, 5, 6, 7, 8, 9, 10 வரிசைகளில் வருவோம்' என்று குமுறி வந்தாலும் இது கோஷ்டிக்குப் பெருமையேயொழிய அவத்ய மாகுமோ? த்வேஷபுத்தியும் த்ரோஹபுத்தியும் தொலைகிறவரையில் எவரும் ஸுகப்பட மாட்டார்; க்ஷேமமடையமாட்டார். வீண்வம்புச்சண்டைகளில் போதுபோக்கிக் கொண்டிருக்கலாம்.

26. "எங்கள் ஆசாரியரைத் தோத்திரம்பண்ணித் தொடங்குகிற கூட்டத்திலல்லது வேறு ஆசாரியர்களைத் துதித்துத் தொடங்குமிடங்களில் நாங்கள் தலைகாட்டுவோமா? அப்படி தலைகாட்டினால் நாங்கள் ஆசார்ய த்ரோஹிகளாகவன்றோ ஆவோம்" என்று நீதிமன்றங்களில் எழுத்து மூலமாகக் கொடுத்தவர்களுக்கு இப்போது உண்டாகியிருக்கும் அனுகூல மனப்பான்மை மெச்சத்தகுந்ததே. மணவாளமாமுனிகளுக்கோ கூரத்தாழ்வான் உடையவர் ஆளவந்தார் முதலானோர்க்கோ புதிய பாத்திரத்தைச் சொல்லி நடத்தும் கோஷ்டியொன்று ஏற்பட்டால் அங்கே ஒரு தென்கலை வைஷ்ணவர் தலைகாட்டுவரா? என்பதை விவேகிகள் ஆலோசித்துத் தெளியவேணும்.

27. சில திவ்யதேசங்களில் தென்கலையாருடைய வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னால் வடகலையார் வேதபாராயண கோஷ்டி நடத்தி வருவது காண்கிறது. வடகலை யாருக்குப் பின்னால் தென்கலையார் போவதென்பதை எந்த த்வீபாந்தரத்திலாவது எந்த

நாளிலாவது கண்டதுண்டோ கேட்டதுண்டோ? ஒரு வேடிக்கை பாருங்கள்; தேவப் பெருமாள் தேவஸ்தானத்தில் சில குறித்த நாட்களில் ஸ்தோத்ர பாடகோஷ்டி யென்று ஏற்பட்டிருக்கிறது. தென்கலை கோஷ்டி முன்னே போகவேண்டிய தென்றும் அதன் பின்னுல் தாதாசார்ய கோஷ்டி போகவேண்டிய தென்றும் முடிவாகி அப்படியே நெடு நாளாக நடந்துவருகிறது. தாதாசாரியர்கள் தங்களை முன்னே போக விடவேண்டுமென்று கோர்ட்டுகளில் மன்ருடிப் பார்த்தும் பலிக்கவில்லை. எங்கும் புரஸ்காரம் தென்கலை யாருக்குத்தான் ஒக்குமென்று முடித்திட்டார்கள். ஒருக்கால் தென்கலையார் கோஷ்டி தாதாசாரியார் கோஷ்டிக்குப் பின்னுல்தான் வரவேண்டியதென்று முடிந்ததாக வைத்துக் கொள்வோம். ஒரு தென்கலை வைஷ்ணவர் அங்கே தென்படுவரா என்பதை எப்படி மனதிலிட்டுப் பார்ப்பது? த்வாதசியன்று ஸூர்யக்ரஹணம் பிடித்தால் பாரணைக்கு ப்ராதாந்யமா? தர்ப்பணத்திற்கு ப்ராதாந்யமா? என்பதை மனதிலிட்டுப் பார்ப்பது போலவேதான் இதையும் ஒருவாறு பார்க்கவேணும். இதிலிருந்து பலமருமங்கள் உணரலாகும்.

28. திருப்பதியில் வாழும் உவே. பண்டிதராஜ. D. T. தாதாசாரியர் ஸ்வாமி ஒரு ஸமாதானம் வெளியிட்டிருந்தார். நாம் எழுதியிருந்த வொரு நூலில்—"ஸ்ரீ ராமாநுஜர் செங்கோல் செலுத்தினவிடமாயும் பூலோக வைகுண்டமாயும் விளங்கு கின்ற ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய புருஷர்களென்றும் ஸ்தலத்தார்களென்றும் தீர்த்தகாரர் களென்றும் வழங்கப்படுகிறவர்களனைவரும் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ஸம்ப்ரதாயஸ்தர் களாகவே யிருக்கின்ருர்களே யன்றி வேறு வகுப்பினரில்லையே; இதற்குக் காரணமென்ன? அந்த ஸ்ரீ ராமாநுஜரே திருநாராயணபுரத்தைச் சீர்திருத்தி அங்கே ஸ்தானிகர்களாக ஐம்பத்திருவர் என்பவர்களை ஏற்படுத்தினுரே, அவர்களிலும் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களைப் புகுத்தாமலிருப்பதற்கும் என்ன காரணம்?" என்று கேட்டிருந்தோம். இதற்கு D.T.T. வடமொழியில் தாமெழுதியச்சிட்டு வெளியிட்டுள்ள ஸம்ப்ரதாய ப்ரதீப மென்னும் சிறு நூலில் பதில் எழுதியுள்ளார். அவருடைய ஸம்ஸ்க்ருத வாக்யத்தையே அப்படியே வெளியிடுகிறேன்.—

"நிர்ப்பந்தாதேவ க்ருதபுண்ட்ரவிபர்யா ஸாஸ் ஸர்வே ஸ்ரீரங்கதேவஸ்தாந புருஷா:; இதம் தத்க்ஷேத்ரஸம்பந்தி ஐதிஹ்யம் அநுவர்த்ததே; ச்ராத்தே நிமந்த்ரிதை: கில போஜநாந்தே த்ருப்திகதநாவஸரே பகவதாலய குஞ்சி காஸு தத்தாஸ்வேவ த்ருப்தோஸ்மீதி கதயிஷ்யாம இதி ச்ராத்தகர்த்தாரம் நிர்ப்பத்ய தஸ்மாத் தேவஸ்தாநாதிகார ஆச்சிந்நஇதி."

என்பது அந்த D. T. T. ஸ்வாமியின் ஸ்வஹஸ்தலிகிதம். (இதன் தமிழ் மொழி பெயர்ப்பு கேண்மின்)—"ஸ்ரீரங்க தேவஸ்தான புருஷர்கள் யாவரும் நிர்ப்பந்தப் படுத்தியே திருமண்காப்பு மாற்றப் பெற்றவர்கள். அந்த ஸ்தலத்தைப் பற்றி ஓர் ஐதிஹ்யம் இங்ஙனே நெடுநாளாக வழங்கி வருகின்றது. ச்ராத்தத்தில் நிமந்த்ரிக்கப்பட்டிருந்தவர்கள் போஜன முடிவில் த்ருப்தி சொல்லவேண்டிய ஸமயத்தில் 'கோவில் சாவிகளைக் கொடுத்தால்தான் த்ருப்தோஸ்மி சொல்லுவோம்' என்று ச்ராத்தகர்த்தாவை நிர்ப்பந்தித்தே அவரிடமிருந்து தேவஸ்தாநாதிகாரத்தைப் பறித்துக்கொண்டார்கள்" என்பதே. ஆரியர்காள்! இந்த ஐதிஹ்யம் உண்மையானதே யொழியக் கல்பிதமன்று. கோயிலொழுகிலும் கூரத்தாழ்வான்

வைபவத்திலும் ராமாநுஜார்ய திவ்ய சரிதையிலும் காணப்படுவதே. ச்ராத்தகர்த்தா திருவரங்கத்தமுதனுர்; நிமந்த்ரிதர் கூரத்தாழ்வான். கோயில் திறவு கோல்களைப் பெற்றுக் கொண்டு த்ருப்தோஸ்மி சொன்னவர் அவரே. த்ரிஜகத் ப்ரஸித்தமான இந்த ஐதிஹ்யத்தை இவர் எடுத்தெழுதியிருப்பதில் பிசகில்லை. புண்ட்ரவிபர்யயம் செய்வதற்காகவே இப்படிப் பட்ட சூது நடந்ததாக D.T. ஸ்வாமி எழுதியிருப்பதைப்பற்றித் தடஸ்த மஹான்கள் தாம் ஆலோசிக்க வேணும். ஸ்ரீ ராமாநுஜர் காலத்திற்கு முன்னே ஸ்ரீரங்க தேவஸ்தானமும் அவ்விடத்துப் பெரியார்களும் வடகலைப் புண்ட்ரமணிந்திருந்ததாகவும், ஸ்ரீ ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்தே மாறுபாட்டை விளைத்ததாகவும் நிர்ணயித்து விட்டாரிவர். இதற்கடுத்தபடி மற்றென்றும் எழுதியுள்ளாரிவர். (அதாவது) மாறிப்போன திவ்ய தேசங்களை மறுபடியும் பழைய நிலைமைக்குக் கொண்டுவர வைதிகர்கள் முயற்சி செய்து வருகிறுர்கள்; அந்த முயற்சி சிலவிடங்களில் பலிக்கிறது, சிலவிடங்களில் பலிக்காமல் போகிறது" என்று. இப்படி இவர் எழுதி வெளியிட்டு இருபது வருஷமாகிறது. இப்போது இதை நாம் புதிதாக எடுத்துக்காட்டவில்லை. தாம் இப்படி யெழுதியிருக்க வில்லை யென்று கூறவழியில்லை. ஸ்ரீ ராமாநுஜர் வாழி திருநாமத்தில் *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று அநுஸந்திக்கப்பட்டு வருகிற படியால் 'வடகலையாயிருந்தவற்றை யெல்லாம் தென்கலையாக்கி வைத்ததுதான் ராமாநுஜர் செய்த திருத்தம்' என்று இவர் பிரவசனம் செய்து வருகிறுர். ஆகவேதான் ராமாநுஜ தர்சநவ்யபதேசத்தில் பகைகொண்டு தேசிகதர்சநவ்யபதேச மொன்றைக் கிளப்பி யுள்ளார்கள். அதிலும் உட்புகுந்து விமர்சிக்கப் புக்கவர்கள் அதையும் மாற்ற மநோரதிக் கிறுர்கள். ப்ராஸங்கிகமானவிது நிற்க.

29. ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் இவ்வூரில் இருகலையாருங் கொண்டாடவெழுந் தருளியிருந்த காலத்தில் காலஞ்சென்ற சில வடகலைப் பிரமுகர்கள் அந்த ஸ்வாமியிடஞ் சென்று 'அத்யாபக வியாஜ்ஜியத்தை மும்மிரமாக நடத்த வேண்டியிருக்கிறது: ஸ்வாமி ஆயிரக்கணக்கில் உதவி செய்யவேணும்' என்றுர்கள். 'நீங்கள் எதிர்பார்க்கிற வெற்றி எவ்விதமானது' என்று கேட்டருளினுர். 'நாமும் முன்வரிசையில் போகவேண்டுமென்பது தான்' என்றுர்கள். அப்போது அந்த ஸ்வாமி ஸாதித்தருளினதாக ஜகத் ப்ரஸித்தமான வார்த்தை—'இப்போது உங்களுக்குக் கிடைத்திருக்கிற தீர்ப்பின்படி நாலைந்து தலைமுறை வரை காலை மிதிக்காமலும் கண்டபடி குத்ஸிதங்கள் பண்ணுமலும் பக்தி ச்ரத்தையோடு கைங்கரியம் செய்து வாருங்கள்; நாளடைவில் ஆழ்வார் கடாக்ஷமுண்டாகி முன் வரிசையில் செல்லும் பாக்ய முடையார்குடியிலே ஜனிக்கப் பெறுவீர்கள்' என்று.

30. ஆரியர்காள்! முடிவில் ஸவிநயமாக விஜ்ஞாபிக்கிறேன். அடியேனெழுதும் விஷயங்கள் வைதிகங்களோ லௌகிகங்களோ எதிலும் நிராலம்பமாக எழுதுவது அணுவளவுமில்லை. ஆனுல் "யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ" என்றபடி சிலர்க்கு த்வேஷ ஹேதுவாகலாம். அதற்காக விவக்ஷிதங்களை வெளியிடாமலிருக்கலாகுமோ? இக்காலத்திலும் எதிர்காலங்களிலும் உண்மையுணரவிரும்புவார் பலர்க்கும் அடியே னுடைய ஒவ்வொரு வியாஸமும் ஒவ்வொரு நூலும் கைவிளக்காயிருக்குமென்று கொள்க. வேதார்த்த ஸங்க்ரஹத்தை முடித்தருளாநின்ற நம் பாஷ்யகாரர் *ஸாராஸாரவிவேக ஜ்ஞா: கரீயாம்ஸோ விமத்ஸரா:, ப்ரமாணதந்த்ராஸ் ஸந்தீதி க்ருதோ வேதார்த்த ஸங்க்ரஹ:* என்றருளிச் செய்ததையே நினைவூட்டி நிற்கிறேன். ... ... ❁

# வையங்கண்ட வைகாசித் திருநாளில் கண்டருளும் வாஹனங்கள் திவ்யப்ரபந்த ஸேவைக்கு அநுகுணமாகவே ஆதிகாலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது.

இதையும் சிறிது விவரிப்போம். முதல்நாள் காலை வாஹனஸேவை ஒன்றுமில்லை. திருப்பல்லாண்டு தொடக்கம் கேட்டருள்வதற்காக வாஹநாரோஹணத்தைத் தவிர்த்து ஸேவை ஸாதிக்கிற க்ரமம். மாலை சிங்கவாஹனம்; அப்போது பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஸேவை; அதில் *என்தொண்டைவாய்ச் சிங்கம் வா* என்று எம்பெருமானைச் சிங்கமாக வரும்படியழைத்த பாசுரம் வருவதால் அதை நோக்கிச் சிங்கவாஹனஸேவை.

இரண்டாந்திருநாள் காலை *ஞானச் சுடர் விளக்கேற்றினேன்* என்று ஞான நூலைக் கொடுப்பதாகத் தொடங்கி *மறையாங்கென வுரைத்த மாலை* என்று எம்பெருமானும் ஜ்ஞான ப்ரதானம் பண்ணினதைச் சொல்லுகிற இரண்டாந்திருவந்தாதி ஸேவையாகையாலே, அன்னமாய் நூல் பயந்த அருளாளனுக்கு அன்னவாஹனஸேவை அமைக்கப்பட்டது. அன்றியும், முதல் நாளிரவு பெரியாழ்வார் திருமொழி ஸேவை முடிவு பாகத்தில் *பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க, அன்று அன்னமதானானே* என்று வருதலால் அதைக் கொண்டும் உடனே ஹம்ஸவாஹன ஸேவை மிகவும் பொருத்தமாயிற்று. இரண்டாநாள் மாலை பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஸேவையில் *அரவணையாயாயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே—இன்னு முச்சி கொண்டதாலோ* என்று ஸூர்யோதய ப்ரஸ்தாவம் பண்ணிக் கண்ணனை யெழுப்புகிற பாசுரம் வருகையாலே ஸூர்யப்ரபை வாஹனம் அமைந்தது.

மூன்றாந்திருநாள் காலை மூன்றாந்திருவந்தாதி ஸேவையில் *பொலிந்த கருடன் மேல்கொண்ட கரியான் கழலே* என்று வருதலால் கருடவாஹன ஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து ஸேவையில் *அடங்கச் சென்றி லங்கையை யீடழித்த அனுமன் புகழ்பாடி* என்றும் *சீராருந் திறலனுமன் தெரிந் துரைத்தவடையாளம்* என்றும் சிறிய திருவடி ப்ரசம்ஸை வருதலால் சிறிய திருவடி வாஹன ஸேவை அமைந்தது.

நான்காந்திருநாள் காலை நான்முகன்திருவந்தாதி ஸேவையில் *ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான்* என்றும் *விரித்துரைத்தவெந் நாகத்துன்னை* என்றும் ஆதிசேஷனுடைய ப்ரஸ்தாவம் வருதலாலும் *வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு* என்று வைகுண்டநாதன் திருவடிகளில் அவ்வாழ்வார் பாசுரம் பாடினதாகச் சொல்லுகையாலும் சேஷவாஹனத்தில் பரமபதநாதன் திருக்கோலஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி நான்காம்பத்து ஸேவையில் *தளிர்மா மதியைச் செஞ்சுடர்நாவளைக்கும்* என்று சந்திரனுடைய ப்ரஸ்தாவம் பண்ணியிருக்கையாலே சந்த்ரப்ரபைவாஹந ஸேவை அமைந்தது.

ஐந்தாந்திருநாள் காலை திருவிருத்தம் ஸேவை. ஆழ்வார் தாமான தன்மையை விட்டு நாச்சியார் திருக்கோலம் பூண்டு அருளிச்செய்த திவ்யப்ரபந்தமதுவாகையாலே

5

அதற்குச் சேர நாச்சியார்திருக்கோலம் பூண்டு பேரருளாளன் ஸேவைஸாதிக்கிறபடி. திருவிருத்தம் என்பதற்கு, திரு—நாச்சியாருடைய, விருத்தம்—வ்ருத்தாந்தம் என்று பொருள். நாச்சியார் திருக்கோலம் பூண்ட ஆழ்வாருடைய செய்திகளைச் சொல்லும் ப்ரபந்தமென்றபடி. இதற்கு மிகவும் பொருத்தமாகவே அன்று நாச்சியார் திருக்கோலம் அமைந்தது. வேறு காரணமில்லை. அன்றிரவு யாளிவாஹனஸேவை ஏற்பாடு செய்திருக்கிறவர்களின் அபிப்ராயத்தை ஆழ்ந்து பார்க்கையில் வெகு ஆச்சரியமுண்டாகிறது. திவ்ய ப்ரபந்தங்களில் ஆளியைப்பற்றின பேச்சுக்கள் சிலவிடங்களில் வருகின்றன. எங்கு வருகின்றனவென்று பார்த்தால் பெரிய மலைகளை வருணிக்குமிடங்களில்தான் வருகின்றன. அஹோபிலம் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை பதரிகாச்ரமம் என்னுமித்தலங்களை வருணிக்கும்போதுதான் யாளிகளைப்பற்றிப் பேசுவது வழக்கம்; *நன்மணி வண்ணனூர் ஆளியுங் கோளரியும் *செங்கணாளி யிட்டிறைஞ்சும்* இத்யாதி பாசுரங்கள் காண்க. ஐந்தாந்திருநாளிரவு திவ்யப்ரபந்த ஸேவையில் பதரிகாச்ரம மார்க்கத்திலுள்ள தேவப்ர யாகையென்கிற கண்டமென்னுங் கடிநகர்ப் பாசுரங்களும், *துக்கச் சுழலையைச் சூழ்ந்து கிடந்த* என்று தொடங்கித் திருமாலிருஞ்சோலைப் பாசுரங்களும் *சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையான் பாசுரங்களும் ஸேவிக்கப்படுவதால் அந்த திவ்யதேசங் களுக்கும் யாளிக்குமே ஸம்பந்தமுள்ளதென்று கொண்டு யாளிவாஹனஸேவையை அப்போது ஏற்படுத்தினர்கள். இவ்வளவு ஆழ்ந்து ஏற்பாடு செய்தவர்களின் புத்தி சாதுரியம் மிகவும் மெச்சத்தக்கதாகவுள்ளது.

ஆறுந்திருநாள் காலை திருச்சந்தவிருத்தம் ஸேவை. அதில் *ஒன்றிரண்டு தீயுமாகி ஆயனாயமாயனே* என்றும் *ஆயனாகி ஆயர்மங்கைவேயதோள்விரும்பினாய்* என்றும் *ஆனைகாத்தோரானைகொன்று அதன்றியாயர்பிள்ளையாய் ஆனமேய்த்தி ஆநெயுண்டி* என்றும் *ஆதியாகி ஆயனாய மாயமென்ன மாயமே* என்றும் கொள்ளை கொள்ளையாக கோபாலக்ருஷ்ண ப்ரசம்ஸை வருதலால் அதற்குச் சேர கோபாலக்ருஷ்ணன் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதிக்கிறபடி. அன்றிரவு யானைவாஹனஸேவை. அது நாச்சியார் திருமொழிஸேவைக்கு மிகவும் பொருத்தமாக அமைந்தது. நாச்சியார் திருமொழியில் *மங்கலவீதி வலஞ்செய்து—அங்கு ஆனைமேல்* என்கிற பாசுரம் ஸேவிக்கப்படுவதற்குப் பொருத்தமாகவே இது அமைந்தது. இதில் மற்றொரு விசேஷமும் கவனிக்கவேண்டும்; அதாவது — ஆனைவாஹனப் பாசுரமாக மேலேயெடுத்துக்காட்டின பாட்டில் *குங்குமமப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து* என்று சூர்ணாபிஷேகம் சொல்லியிருக்கையாலே இதுவும் அன்று காலை வைதிகச் சடங்காக நடத்தப்பட்டுவருகிறது.

ஏழாந்திருநாள் திருத்தேர். திருமங்கையாழ்வார் திருத்தேர்ப் பிரபந்தமாகத் திருவெழுகூற்றிருக்கை ஸாதித்தது உலகமறியும். அது ரதபந்தத்தில் அமைந்தது. அந்த திவ்யப்ரபந்த ஸேவைக்குச் சார்பாக ரதோத்ஸவம் வெகு பொருத்தமாக அமைந்தது. திருத்தேர் நிலை சேர்ந்தபின்பு பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளுகையில் திருமடல் முடிந்தபின் நாச்சியார் திருமொழியில் சேஷம் ஸேவிப்பது வழக்கம். *கருப்பூரம் நாறுமோ* என்கிற ஒரு பதிகம் ஸேவித்து முடிப்பர்கள். அதில் *செங்கண்மால் தன்னுடைய வாய்த் தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்* என்கிற பாசுரம் வருவதை நோக்கி அன்று பகலில் திருப்பாய்ந்தாடித் திருமஞ்சனமென்று நடத்தப்பட்டு வருகிறது.

அன்றிரவு பெரிய திருமொழி திவ்யப்ரபந்தத் தொடக்கம். அஸ்தருளிச் செய்த ஆழ்வாருடைய சரிதையிலுள்ள வேடுபறிகதைக்கு அநுகுணமாகவே பாதிவழியில் திருமங்கையாழ்வாரை யெழுந்தருளப்பண்ணி அவர்க்கு மரியாதைச்சிறப்புகள் நடத்தி திவ்யப்ரபந்தத் தொடக்கம் செய்வது நாளைக்கும் வழக்கத்திலுள்ளது. *ஆடல்மாவலவன் கலிகன்றிக்காகவே பெருமாளும் ஆடல்மா வென்னும் குதிரைவாஹனம் கண்டருள்வது.

திவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களுடைய அநுபவப்ரகாரங்களில், நாச்சிமார்கள் எம்பெருமானை வெறுத்துத் தள்ளுதல் [மட்டையடி] என்பது ஒரு விலக்ஷணுநுபவம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் இது விஷயமாக மூன்று பதிகங்கள் பாடியுள்ளார்கள். இவ்வநுபவம் ஒன்பதாநாள் காலையில் ஒரு நாடக மாக அபிநயம் செய்யப்பட்டு வருகிறது. பெருமாள் தனியே யெழுந்தருளிப் பட்டி மேய்ந்து வருவதும், நாச்சிமார்கள் இவரை உள்ளே புகவொட்டாமல் தடுப்பதுமாக நடந்துவருவது ஆழ்வாரநுபவமேயாகும்.

மறுநாள் திருவாய்மொழி ஆயிரத்தையும் கேட்டருள்வதற்காகப் பன்னிரண்டு திருவாராதனங்கள் கண்டருளி இரவு இராமாநுச நூற்றந்தாதிக்காக சிசிரோபசாரப் புறப்பாடு கண்டருளி உத்ஸவஸமாப்தியாகிறது. ஆக இப்படிகளை ஊன்றிநோக்கு மளவில் திவ்யப்ரபந்த ஸேவையை யநுஸரித்தே வாஹனப் புறப்பாடுகளில் நியதி ஏற்பட்டிருக்கின்றதென்பது கல்வெட்டாகத்தேறும்.

இப்படி நாம் நிரூபணம் செய்வதைக் காண்கின்ற பிறர் ஸஹஸா ஒரு வார்த்தை சொல்லிவிடக் கூடும்; பெருமாள் வாஹனஸேவைகள் கொண்டருளுகிறபடிக்குத் தகுதி யாக இவர்கள் திவ்யப்ரபந்த ஸேவைகளை அமைத்துக் கொண்டார்களே யல்லது, திவ்ய ப்ரபந்த ஸேவைகளுக்குத் தகுதியாக வாஹநஸேவை ஏற்படுத்தப்படவில்லை—என்று.

இது பொருத்தமான வார்த்தையாகாது; திவ்யப்ரபந்த ஸேவை இஷ்டமானபடி பொறுக்கிப்பொறுக்கி பெடுத்து அமைத்திருக்கவில்லை; காலைவேளைகளில் இயற்பாஸேவை வரிசையாகவும், மாலை வேளைகளில் பெரியாழ்வார் திருமொழி ஸேவை வரிசையாகவும் நடந்து வருவதால், வாஹனஸேவைகளுக்குத் தக்கபடி பாசுர ஸேவையை அமைத்துக் கொண்டதாகச் சொல்வதற்கு அவகாசமேயில்லை. இதர திவ்ய தேசங்களில் வாஹன க்ரமங்கள் வேறு வேறு விதமாக இருப்பினும், தேவப்பெருமாள் ஆழ்வார் ஸ்ரீஸூக்திக் கென்றே இட்டுப் பிறந்தவராதலாலும், அந்த ஸ்ரீஸூக்தியில் வியாமோஹம் காரண மாகவே உடையவரையும் இழந்தவராதலாலும் இத்தேவப்பெருமாள் ஸன்னிதி ஸம்பந்தப் பட்டவரையில் நாமிங்கு நிரூபித்த திவ்ய ப்ரபந்தப் பொருத்தங்களும் ஏற்றங்களும் அசைக்க முடியாதவை.

தினப்படியாக நாலாயிரக்ரமமான ஸேவை யென்பது பூலோகத்திற்குள் தேவப் பெருமாள் ஸன்னிதியொன்று தவிர மற்றெவ்விடத்திலுங் கிடையாது. தேவப் பெருமாளுக்குண்டான திவ்ய ப்ரபந்த வ்யாமோஹத்திற்கு விஜயத்வஜமன்றோ இது. இங்ஙனே நாம் நிரூபிக்கவேண்டியவை பலபலவுமுள. இங்கே சுருங்கச் சொன்னபடி.

இந்த தேவஸ்தானத்தில் தர்ம நிர்வாஹத்திற்கு வரும் மஹான்கள் தங்களுடைய ஜன்மஸித்தமான வெறுப்பு விருப்புகளை வெகு தூரத்தில்தள்ளி, இவ்விஷயங்களை யெல்லாம் நன்கு விமர்சித்தும், நெடுங்காலம் தவறாக நடத்திவந்தவர்களை விலக்கி நியாயப்படி நடத்துவதற்கன்றோ நாம் நியமிக்கப்பட்டிருக்கிறோமென்பதை ஒவ்வொரு நாளும் ஸுப்ரபாதத்தில் ஹ்ருதய பூர்வகமாக நினைத்தும் ருஜுவான வழியில் நடந்து கொள்வதே நலம். நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ...

ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதாயநம:.

# திவ்ய தம்பதி வைபவ விம்சதி.

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியுபகரித்துவரும் உபந்யாஸக ஸௌபாக்ய மாலையில் நாற்பதாவது மலர்.

எம்பெருமானும் பிராட்டியுமாகிற திவ்ய தம்பதிகளின் வைபவத்தை இருபது வாக்கியங்களினால் விசதீகரிப்பது.

க்ருபயா திவ்யதம்பத்யோஸ் தத்வைபவமுதீர்யதே.
ப்ராமாணிகாநாம் ப்ராஜ்ஞாநாம் ப்ரஹர்ஷாயைவ கேவலம்.
நிகமாந்ததருத்தம்ஸைர் நிஜிவத் விநிவேசிதாந்.
அநவத்யாந் ஸுஹ்ருத்யார்த்தாந் தத்ந்யாநபி தர்சயே.

நேற்றைச் சித்திரைத் திங்களில் ஸ்ரீபெரும்பூதூரில் நடந்த எம்பெருமானார் மஹோத்ஸவத்தில் மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் 6, 7, 8 உத்ஸவ தினங்களாகிய மூன்று திருநாட்களில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருமலை திருப்பதி. பெரிய ஜீயர் ஸ்வாமியின் ஆத்யக்ஷயத்தில் வித்வத் ஸதஸ்ஸு நடைபெற்றதென்பது முந்திய ஸ்ரீ ராமாநுஜனில் (222ல்) அறிவிக்கப்பட்டுள்ளது. அப்போதைய கோஷ்டியின் ஒரு பகுதியை இங்கே ஸேவிக்கப் பெறுகிறீர்கள். அப்போது மூன்றுவது நாளில் விஜ்ஞாபித்த விஷயங்கள் உலகமறிய ப்ரபந்நீகரித்து வெளியிடப்படுகின்றனவிங்கு.



ஸ்ரீபெரும்பூதூர் வித்வத்ஸதஸ்ஸு கோஷ்டியின் ஒரு பகுதி.

1. இவ்வுலகின்கணுள்ள எண்ணிறந்த மதங்களுள், பெருமாளும் பிராட்டியு மாகிற திவ்ய தம்பதிகளைத் தஞ்சமாகக் கொள்ளுங்கொள்கை ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத் தினர்க்கே அஸாதாரண மென்று சொல்லலாம். சித்தும் அசித்தும் ஈச்வரனுமாக ஒப்புக் கொள்ளப்பட்ட தத்வத்ரயத்தினுள் சித்து என்பது சேதநர்களை. சேதநவர்க்கமானது பத்தர் முக்தர் நித்யர் என்று மூன்று வகுப்பாகப் பிரியலுற்றது. ஸம்ஸாரிகள் பத்தரெனப் படுவார்; அநாதியான அசித் ஸம்பந்தத்தினால் கட்டுண்டு கிடப்பவர்களென்றபடி. இதில் நின்றும் விடுபட்டு முக்தி யடைந்தவர்கள் முக்தரெனப்படுவார். ஒரு நாளும் இந்த ஸம்ஸார நிலத்தில் கால் வையாமல் நித்ய விபூதி யென்கிற திருநாட்டிலேயே நித்ய கைங்கரியத்திலீடுபட்டு வாழும் சேஷ சேஷாசந கருட ப்ரமுகர்கள் நித்யர்கள் (அல்லது) நித்ய ஸூரிகள் எனப்படுவார். ஆக பத்த முக்த நித்ய ரூபேண மூன்று படிப்பட்ட சேதந வர்க்கத்தில் முமுக்ஷுவென்கிற ஒரு வகுப்பும் அங்கீகரிக்கப்படுகிறது. பந்தத்தில் நின்றும் விடுபடவேணுமென்கிற ருசி யுடையார்களே முமுக்ஷுக்களெனப்படுவார். இவர்களும் ஸம்ஸாரிகளாயிருக்கச் செய்தேயும் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபட வேணுமென்கிற ருசி யுடைமை இவர்களுக்குத் தன்னேற்றம். இது காரணமாகவே இவர்களுக்கு முமுக்ஷுக்களென்கிற சிறப்புப் பெயர் வாய்த்தது. இந்த வ்யபதேசம் "முமுக்ஷுர்வைசரணமஹம் ப்ரபத்யே" இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களிலே ஏறிக்கிடக்கிறது. முமுக்ஷுக்களென்று பெயர் பெற்றவர்கள் முக்கியமாக மூன்று ரஹஸ்யங்களை யறிய வேண்டும். திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்பன மூன்று ரஹஸ்யங்கள். இவற்றுள் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமே திருமந்த்ரமெனப்படும். அடுத்த த்வய மந்த்ரத்திற்கு மந்த்ர ரத்னமென்று வ்யபதேசம். இதற்கு அநுஸந்தான ரஹஸ்யமென்றும் ஒரு பெயருண்டு. ஸதா அநுஸந்தானத்திலிருக்க வேண்டிய ரஹஸ்ய மென்பது பொருள். இப்பெயர் ஆசார்ய ஹ்ருதயத்தில் கையாளப்பட்டுள்ளது. அதில் மூன்றாவது பிரகரணத்தில் "இவற்றுக்கு மந்த்ர வித்யநுஸந்தான ரஹஸ்யங்களோடே சேர்த்தி" என்கிற சூர்ணை காண்க.

2. மற்றை யிரண்டு ரஹஸ்யங்களிற் காட்டிலும் த்வய மென்னும் ரஹஸ்யம் மிகச் சிறந்தது. இதற்கு முக்கியமாக இரண்டு காரணங்களுண்டு. திருமந்திரத்திலும் சரம ச்லோகத்திலும் பிராட்டியைப் பற்றின பேச்சு கிடையாது: திருமந்திரத்தில் அகாரத்தின் பொருளை விவரித்தருளும் பிள்ளை லோகாசாரியர் "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸன்னிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீ ஸம்பந்த மநுஸந்தேயம்" என்றருளிச் செய்திருக்கையாலே பிராட்டிக்கு வாசகமான சப்தம் திருமந்த்ரத்தில் கிடையாதென்பது தேறிற்று. சரமச்லோகத்தில் பிராட்டியைப் பற்றின ப்ரஸ்தாவமே கிடையாது. த்வயத்திலோ வென்னில் பூர்வ வாக்யமென்றும் உத்தர வாக்யமென்றும் இரண்டு கண்டங் களுள்ளன வன்றோ; இரண்டிலும் முகப்பில் பிராட்டிக்கு வாசகமான ஸ்ரீ சப்தம் அமைந்திருப்பது ஒரு விசேஷம். ஸ்தநந்தய ப்ரஜைக்குத் தாயினுடைய அவயவங்க ளெல்லாங் கிடக்க ஸ்தனமென்னும் அவயவமே உத்தேச்யமாகிறப் போலே ப்ரபந்நர் களான சேதநர்க்கு எம்பெருமானுடைய திருவடியே பரமோத்தேச்யமாகின்றது. இத்திருவடியின் ப்ரஸ்தாவம் மற்றையிரண்டு ரஹஸ்யங்களிலின்றிக்கே இந்த த்வய

ரஹஸ்யத்தில் மட்டுமே யிருப்பது மற்றொரு விசேஷம். ஆக இவ்விரண்டு சிறப்புகளும் த்வயத்தின் ஏற்றத்தை ஸ்தாபிக்கின்றன.

3. பூர்வ கண்டம், உத்தர கண்டம் ஆகிய இரண்டு கண்டங்களினுடையவும் முகப்பில் பிராட்டிக்கு வாசகமான ஸ்ரீ சப்தமிருப்பதாகச் சொன்னோம். இஃது இரண்டிடத்தில் எதற்காக விருக்கிறது? இரண்டிடத்திலும் பொருள் ஒன்றே தானா? அன்றி வெவ்வேறு பட்டுள்ளதா? என்கிற விசாரம் இங்குத் தோன்றக் கூடியது. இதைப் பற்றிச் சொல்லுகிறோம். கேண்மின். இரண்டிடத்திலும் 'ஸ்ரீ' என்கிற சொல் தனிப் பட்டிருக்கவில்லை. 'மதுப்' பென்கிற ஒரு ப்ரத்யயத்தோடே கூடி நாராயணனுக்கு அடைமொழியாக இருக்கின்றது. முற்கூற்றில் 'ஸ்ரீமந் நாராயண' என்றும், பிற்கூற்றில் 'ஸ்ரீமதே நாராயணாய' என்று முள்ளது. *அகலகில்லேனிறையு மென்று அலர்மேல் மங்கையுறை மார்பா!* என்று நம்மாழ்வாரருளிச் செய்துள்ளபடியே ஒரு நொடிப் பொழுதும் விட்டுப் பிரியமாட்டேனென்றிருக்கிற பெரிய பிராட்டியாரோடே கூடியிருந் துள்ள நாராயணனுடைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறேன் என்பது முற்கூற்றின் பொருள். இனி பிற்கூற்றின் பொருளாவது, பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ள நாராயணனுக்கு எல்லா வடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேணும், அதனாலுண் டாகும் மகிழ்ச்சியில் எனக்கு யாதோர் அந்வயமும் இல்லாதிருக்க வேணும்—என்பதாம்.

4. முன்னம் முற்கூற்றின் பொருளை நன்றாக சோதித்தனுபவித்துவிட்டு, பின்னை பிற்கூற்றின் பொருளை யநுபவிப்போம். இரண்டையும் சேர்த்து மநுபவிப்போம். ஸ்ரீ என்னுஞ் சொல்லுக்கு ஸம்பத்து முதலானவையும் பொருளாக இருந்தாலும் இங்குப் பெரிய பிராட்டியாரென்னும் பொருளே கொள்ளப்படுகிறது. *ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:* என்பது இதற்கு ப்ரமாணம். *லக்ஷ்மீ: பத்மாலயா பத்மா கமலா ஸ்ரீர் ஹரிப்ரியா* என்பது அமரகோசம். *ஸ்ரீரித்யேவ ச நாம தே* என்றார் ஆளவந்தாரும். இந்த ஸ்ரீ சப்தத்திற்கு ஆறுவகையான வ்யுத்பத்திகள் கொள்ளப்பட்டு அவற்றுக் கிணங்க ஆறு பொருள்கள் கொள்ளப்படுகின்றன. முக்கியமாக இரண்டு வ்யுத்பத்திகளையும் இரண்டு பொருள்களையும் கொள்வர். "ஸ்ரீயதே இதி ஸ்ரீ:; ச்ரயதே இதி ஸ்ரீ:" எல்லா ராலும் ஆச்ரயிக்கப்படுகிறாள் என்பது முதல் வ்யுத்பத்தியில் கிடைக்கும் பொருள். தான் எம்பெருமானை ஆச்ரயிக்கிறாளென்பது இரண்டாவது வ்யுத்பத்தியினால் கிடைக்கும் பொருள். கேட்பாரற்ற ஸ்வதந்திரனாகிய எம்பெருமான் எங்கள் குற்றங்களைக் கண்டு சீறி யருளாதபடி புருஷகாரக்ருத்யம் பண்ணி எங்களை அவனோடே சேர்ப்பிக்க வேணு மென்று வேண்டிக்கொள்ளும் சேதனர்களால் ஆச்ரயிக்கப்பட்டு, அந்த வேண்டுகோளை நிறைவேற்றுதற்காகத் தான் எம்பெருமானை யணுகி உகப்பிக்குமவள் என்பது இரண்டு வ்யுத்பத்திகளினாலும் தேறிற்றாகும். ஆகவே, புருஷகார க்ருத்யத்திற்காகப் பிராட்டியை முன்னம் பற்றுவதாகத் தேறி நின்றது. 'ஸ்ரீமந் நாராயண சரணௌ' என்று முழுச் சொல்லாக இருந்தாலும், ஸ்ரீயினுடையவும் நாராயணனுடையவும் திருவடிகளை என்று பிரித்துப் பொருள் கொள்வர் நம் பூருவாசாரியர்கள்.

5. இதற்குப் பிரமாணமாக எம்பெருமானார், பட்டர், வேதாந்தவாசிரியர் ஆகிய மூவருடைய ஸ்ரீஸூக்திகளைக் கொள்வோம். எம்பெருமானார் அருளிச் செய்த சரணாகதி

கத்யம் இந்த த்வயத்திற்கு விவரண மென்று வியாக்கியானித்தருளுகிருர் வேதாந்த வாசிரியர். அந்த சரணுகதி கத்யத்தில் *பகவந்நாராயணுபிமதாநுரூப......அசரண்ய சரண்யாம் சரணமஹம் ப்ரபத்யே* என்று பிராட்டியின் ப்ரபத்திபரமான வாக்கியம் தனிப்பட்டுள்ளது. அதற்கு மேல் ஐந்தாவது வாக்கியத்திஞல் [*அகில ஹேயப்ரத்யநீக... ஸ்ரீமந்நாராயண! த்வத்பாதாரவிந்த யுகளம்,...சரணமஹம் ப்ரபத்யே*] என்பதஞல் எம்பெருமானை நோக்கிப் பண்ணப்படுகிற ப்ரபத்தி தனியே கூறப்பட்டது. இங்கு முதலில் அநுஷ்டிக்கப்பட்ட பிராட்டிப்ரபத்தி யானது புருஷகார ப்ரபத்தி யென்றும் பிறகு செய்யப்படுகிற பகவத் ப்ரபத்தி உபாயவரணமென்றும் மூலத்திலேயே ஸ்பஷ்ட மாக அறியக் கிடப்பது தவிர, கத்ய பாஷ்யத்தில் வேதாந்தவாசிரியராலும் ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுள்ளது. பட்டர் ரஹஸ்யத்ரய விவரணமாக அருளிச் செய்த அஷ்ட ச்லோகியில் (5, 6.) *நேத்ருத்வம் நித்ய யோகம்* *ஈசாநாம் ஜகதாம்* என்கிற இரண்டு சுலோகங்களிலும் பிராட்டியை ஆச்ரயிப்பது புருஷகாரத்வேந என்று வ்யக்தமாக விளக்கப்பட்டுள்ளது. இதைச் சிறிது விவரிப்போம். (ச்லோ. 5ல்) நேத்ருத்வம் என்றது புருஷகாரத்வம் என்றபடி. *நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசித குணஜாதம் தநுக்க்யாபநம் சோபாயம் கர்த்தவ்ய பாகம்* என்னுமளவால் பூர்வ கண்டத்தின் ப்ரமேயத்தைக் காட்டிவிட்டு, *அத மிதுந பரம் ப்ராப்யம்* என்று தொடங்கி உத்தர கண்டத்தின் பொருளைக் காட்டியருளுகிருர். மேல் (ச்லோ. 6ல்) *ஈசாநாம் ஜகதாம தீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய* என்னுமளவால் புருஷகார ப்ரபத்தியைத் தனிப்படக் காட்டி, மேல் *அங்க்ரீ ஹரேராச்ரயே* என்பதஞல் உபாயவரணத்தைத் தனிப்படக் காட்டி, அதற்குமேல் *ச்ரியா ச ஸஹிதா யாத்மேச்வராயார்த்தயே* என்று தொடங்கி இருவருமான சேர்த்தியிலே கைங்கரியம் செய்ய வேணுமென்று பிரார்த்திப்பது உத்தரகண்டத்தின் பொருளாகக் காட்டப்பட்டுள்ளது.

6. ஆக, புருஷகாரமாகப் பிராட்டியை ஆச்ரயித்தல், உபாயமாக எம்பெருமானை யாச்ரயித்தல், இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்ய விரும்புதல் ஆகிய மூன்று விஷயங்கள் இரண்டு கண்டங்களாக அமைந்த த்வயத்தின் பிரமேயம் என்று விளக்கப் பட்டதாயிற்று. இதை இவ்வண்ணமாகவே கத்ய பாஷ்யத்தில் நிகமாந்த மஹா குருவும் விளக்கியுள்ளார். ஏவஞ்ச, பூர்வகண்டத்தில் பிராட்டிக்குப் புருஷகாரத்வேந மட்டும் உத்தேச்யத்வமும், உத்தரகண்டத்தில் கைங்கர்ய தசையில் அவளுக்கு எம்பெருமாஞேடு சேர்த்தியும் பூர்வாசார்யாபிமதம் என்பது விளக்கப்பட்டதாயிற்று. பிராட்டிக்குப் புருஷகாரத்வமென்பது தவிர்க்க முடியாதவொரு தன்மை. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பகவத் வசனத்தைப் பூர்வாசாரியர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள். பட்டர் ஸ்ரீகுண ரத்ன கோசத்தில் *''பிதேவ த்வத்ப்ரேயாந் ஜநநி''* இத்யாதி ச்லோகத்தாலே பிராட்டியின் புருஷகாரக்ருத்ய ப்ரணளியை உபபாதித்திருக்கிருர். இதை வேதாந்தவாசிரியரும் எடுத்துக்காட்டியுள்ளார்.

7. புருஷகாரத்வமும் உபாயத்வமும் ஒரே வ்யக்தி பக்கலில் ஒன்று கூடி யிருப்பது அஸம்பாவிதம். புருஷகாரத்வமாவது சிபார்சு செய்கை. உபாயத்வமாவது தானே கொடுக்க சக்தியுற்றிருக்கை. ஒரு பொருளை ஒருவன் தானே கொடுக்க சக்தஞ

யிருந்தானுகில் அவன் அந்தப் பொருளைக் கொடுப்பிக்க வேறெருருவரிடத்தில் மன்ருடுவது அஸம்பாவிதம். கோவில் கட்டுவது, குளம் வெட்டுவது, சத்திரம் கட்டுவது முதலான தரும காரியங்களுக்காக ஒருவர் பொருள் யாசிக்கிருர். அப்பொருளைப் பரிபூர்ணமாகக் கொடுக்க ஒருவரே சக்தராயிருந்தால் தானே கொடுத்துக் காரியத்தை நிறைவேற்றுகிருர். சக்தியற்றவராயிருந்தால் ஆப்தர்களிடத்தில் சிபார்சு செய்கிருர். தாம் சிறிது கொடுத்துப் பிறரிடம் சிபார்சும் செய்வாருமுளர். ஆனல் தாம் கொடுக்கும் பொருள் எதுவோ அதற்கே பிறரிடம் சிபார்சு செய்வதென்பது அஸம்பாவிதம். மோக்ஷமாகிற புருஷார்த்தத்தைக் கொடுக்கப் பிராட்டி தானே ஸ்வயம் சக்தையாகில் அந்த சக்தி அவளுக்குப் புஷ்கலமாயிருக்குமாகையாலே நிக்ரஹாதீநனுய் தண்டதரனுன எம்பெருமானிடத்தில் தான் மன்ருடாமல் *நித்ய மஜ்ஞாத நிக்ரஹையாய் அநுக்ரஹமயியானதானே கொடுத்து மகிழ என்ன தடை? ஒரு தடையுமிருக்க ப்ரஸக்தி யில்லை. இவள் புருஷகார க்ருத்யத்தில் ஊன்றுகிருள் என்பதாக சாஸ்த்ரங்கள் கோஷித்திருப்பதைக் கண்டவுடனே இவளுக்கு உபாயத்வத்தில் அந்வயமில்லை என்று அறுதியிடத் தட்டில்லையாயிருந்தது. இங்ஙனே அறுதியிட்ட ஆசிரியர்களில் தலைவர் வேதாந்தவாசிரியராவர். அவர் தென்மொழியிலும் வடமொழியிலும் அருளிச் செய்திருப்பவை காணீர்;—

8. ரஹஸ்ய ரத்நாவலி யென்றருளிச்செய்த பதின்மூன்ருவது ரஹஸ்யத்தில் நான்காவது வாக்கியம்—"ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்ம சாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்பது. உடனே ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்னும் அடுத்த ரஹஸ்யத்திலே இந்த வாக்கியத்தை விரிவாக வியாக்கியானித் தருளுகையில் முடிவாக வருளியது...'பிராட்டி ஸாபராதரானவர்களெல்லாருக்கும் சாஸிதாவான ஸர்வேச்வரன் அபிமதம் கொள்ள மாட்டாதே தயங்காதபடி அவனுடைய பித்ருத்வப்ரயுக்தமான ஊஷ்மளீ பாவத்தை *உசிதைருபாயைர்விஸ்மார்ய* என்னும்படி யாக்கி இவர்களை அவன் திருவடிகளிலே சேர்த்து *தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரது செய்யார்* என்னும்படி பண்ணிக்கொண்டு *பவேயம் சரணம் ஹி வ:* என்றருளிச் செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேதுவாகிருளென்றபடி" என்பதாம். இதில் "ரக்ஷா ஹேது வாகிருள்" என்றது மிகவும் குறிக்கொள்ளத்தக்கது. ரக்ஷை பண்ணுகிறவன் ஸர்வேச்வரனே யென்றும், புருஷகாரக்ருத்யமுகத்தாலே அதற்குத் தான் ஹேது வாகிருளத்தனை யென்றும் காட்டியவாறு.

9. அவ்வாசிரியர் தமிழில் இங்ஙனே யருளிச் செய்துள்ள வாக்கியங்கள் மற்றும் பல இருந்தாலும் இங்கு இவ்வளவு போதும். இனி வடமொழியில் அவர் அருளியவற்றைக் காட்டுவோம். ஆளவந்தார் சதுச்ச்லோகியில் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசநமந: காந்தா ப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்றருளிச் செய்தார். இதனல் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அநுக்ரஹமில்லாமல் மோக்ஷ மார்க்க முட்பட எந்த மார்க்கத்திலும் நன்மை கிடைக்காது என்று கூறப்படுகிறது. பிராட்டியின் அநுக்ரஹம் எவ்விதமாக நன்மை பயக்கிறது என்பதை விவரிக்க வேண்டி வந்த

படியாலே அவ்விடத்து பாஷ்யத்தில் இவ்வாசிரியர் தாமே விளக்கமாகவருளிச் செய்துள்ளார்—* "மோக்ஷ ப்ரதே பகவதி முமுக்ஷுணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" * என்று. இந்த வாக்கியத்தினால் தெரிவிக்கப்படுவது என்னவென்றால்; மோக்ஷமளிப்பவன் எம்பெருமான்தான்; பிராட்டி புருஷகாரமாக மட்டும் நிற்கிறாள் என்பது யாவருமிசைந்தது—என்பதாம். இதற்கு மேலும் அருளிச்செய்திருப்பது காணீர்;

9. "பரிபூர்ணானுபவப்ரதான ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வேதி யதாப்ரமாணம் பவது; ஸர்வதா வைஷ்ணவாத்வ ச்ரேய: ப்ரதத்வம் அஸ்யா இஹோச்யமானம் ந விருத்தம்" என்று முடிக்கிறார். இதனால் சொல்லிற்றாகிறது என்னென்னில், முமுக்ஷுவுக்குப் பரிபூர்ணானுபவத்தைக் கொடுப்பதாக ஸங்கல்பம் செய்வதுதானே உபாயக்ருத்யம்; அந்த ஸங்கல்பத்தை எம்பெருமான் தானே ஏகாகியாயிருந்து செய்கிறானா? அல்லது பிராட்டியோடு கூடியிருந்து செய்கிறானா? என்பது ப்ரமாணம் தெரிவிக்கிற கட்டளையிலேயாகட்டும். மோக்ஷ மார்க்கத்திற்கு இவள் நன்மை செய்கிறாளென்று இங்குக் கூறியிருப்பது பொருந்தாமற்போக வழியில்லை—என்பதாம். மேலெடுத்த வாக்யத்தில் "பரிபூர்ணானுபவமளிக்கைக்கிடான ஸங்கல்பம் எம்பெருமானுக்கு மட்டுமேயா? பிராட்டிக்குங்கூடவா?" என்று இங்ஙனே விகல்பிக்கவுங்கூட ஸஹியாதவர் இவ்வாசிரியர் என்பது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. "யதாப்ரமாணம் பவது" என்கையாலே இதில் தமக்கொரு விபரீத நிஷ்கர்ஷமில்லாமை காட்டப்பட்டது.

10. இந்த ப்ரகரணத்தில் ஸாரமாக அவர் பணித்ததொரு காரிகை காணீர்—"அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்ய த்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே" என்பதாம். இதன் பொருளாவது, எம்பெருமான்தான் கர்மாநுகுணமாகப் பலன் பெறுவிக்குமவன்; பிராட்டிக்கோ வென்றால் இரண்டு க்ருத்யமுள்ளது, அவன் நிக்ரஹிப்பதாக இருக்குமளவில் உசிதோபாயங்களாலே அந்த நிக்ரஹத்தில் நின்றும் தடுப்பது ஒரு காரியம்; அவன் அநுக்ரஹாபிமுகனாமளவில் அவ்வநுக்ரஹத்தை மேன்மேலும் வளரச் செய்வது மற்றொரு காரியம் என்பதாம். கவிதார்க்கிக கேஸரியான ஆசார்யவர்யர் இவ்வளவு ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கவும், சிலர் பிராட்டிக்கும் உபாயத்வத்தில் அந்வயமுண்டாக ப்ரமித்தோ, அல்லது நெடுநாள் ஊறியிருந்த ப்ரமம் நீங்கியும் அதை விடமாட்டாத வாஸனை கொண்டோ அந்தோ! விபரீதமாகவே யெழுதிப் போருகிறார்கள். அன்னவர்களது மருளை இன்னமும் துடைப்போம்.

11. ஈடு முப்பத்தாறாயிரப்படி மஹா ப்ரவேசத்தில் "ஆச்ரயண வேளையோடு போகவேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யமென்னுமிடம் சொல்லிற்றாயிற்று" என்கிற திவ்ய ஸூக்தியுள்ளது. ஒரு மிதுநம் ஆச்ரயண வேளையில் உத்தேச்யமாகிறது எப்படி? போகவேளையில் (அந்த மிதுனம்) உத்தேச்யமாகிறது எப்படி? என்பதைக் கீழ் பரக்க உபபாதித்தோம். வேதாந்த வாசிரியரின் திருவாக்குகள் கண்ணாடிபோல் காட்டியுள்ள விஷயமது. ஆச்ரயணவேளையில் பிராட்டியை உபாயமாகவல்லாமல் புருஷகாரமாகப் பற்றியே தீரவேண்டியிருக்கையாலே ஆச்ரயணத்தில் திவ்ய தம்பதிகளிருவரும் உத்தேச்யர் என்பதில் என்ன பிணக்கு? உத்தர கண்டத்தில் சொல்லப்படுகிற கைங்கர்யத்திற்கு திவ்ய தம்பதிகள் உத்தேச்யராகிருப்போலே, பூர்வகண்டத்தில் சொல்லப்படுகிற

ஆச்ரயணத்திற்கும் திவ்ய தம்பதிகள் உத்தேச்யராவதில் என்ன தடை? ஆனால் ஒரு வாசியுள்ளது; எம்பெருமானுடைய ஆச்ரயணம் உபாயதயா; பிராட்டியினுடைய ஆச்ரயணம் புருஷகாரதயா. இந்த வாசியை ஸகலாசார்யர்களும், விசேஷித்து வேதாந்தவாரியரும் ஸ்பஷ்டமாகக் காட்டியிருப்பது அபலபிக்க முடியாதது. இன்னமும் விவரிக்கவேணுமோ?

12. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயத்தின் பூர்வகண்டத்தில் (ஸ்ரீமத்) என்ற விடத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விசேஷணத்வமா? என்றொரு சர்ச்சையை வளர்த்திக்கொண்டு உபலக்ஷணத்வமென்று சில ஆசார்யர்கள் சொல்லுவதாக வைத்து அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிக்கப்படுகிறது. அங்கு— "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருட பூர்வச்ருதோ மூர்க்கோ தர்மாணுமவிசாரத:, ..அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி* என்கிற தசையாம்" இத்யாதி ஸம்பாவனைகளோடே தலைக்கட்டியிருக்கிறது. இந்த ஸம்பாவனைகள் உண்மையில் யாருக்குச் சேருகின்றன வென்பதை விவேகிகள் விமர்சிக்க வேணும். இங்குப் பிராட்டிக்கு விசேஷணத்வ மில்லையென்று ஒரு பூர்வாசார்யரும் உரைத்ததில்லை. முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தில் 'இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—"(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச் செய்திருக்குமிடத்து பிராட்டிக்கு விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே அருளிச் செய்திருப்பது காணலாம்.

13. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லை யென்பதை சாஸ்த்ரமர்மஜ்ஞர்கள் உணருவர்கள். இதைப் பல நூல்களில் விசதீகரித்திருக்கிறோம். ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு சாஸ்த்ரஜ்ஞர்கள் யாரும் வியாக்கியான மெழுதவில்லை. நவீன காலத்தில் சிறந்த சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் எழுதி வெளியிட்டுள்ள வியாக்கியானத்தில் உண்மை வெளிவந்துள்ளது. அந்த இஞ்சிமேட்டு ஸ்வாமி நமது க்ரந்தங்களைப் பூர்வாச்ரமத்திலும் உத்தராச்மத்திலும் பூர்த்தியாகக் கடாக்ஷித்தவராகையாலே நல்ல தெளிவுடன் எழுதியிருப்பதைக் கேளீர். அல்லது காணீர்.

14. அந்த ஸ்வாமியின் பதிப்பில் இரண்டாவது ஸம்புடத்தில் (பக்கம் 29ல்) விசேஷணத்வ உபலக்ஷணத்வங்கள் ஜந்மாத்யதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் விவரிக்கப் பட்டிருப்பதாக எடுத்துக் காட்டிவிட்டு அதற்குமேல் எழுதுகிறார் வித்வானான இஞ்சிமேட்டழகியசிங்கர்—

"இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை, சொல்லவும் முடியாது" என்று.

உண்மையில் நம்முடைய நூல்களிலுள்ள நிருபணங்கள் அசைக்க முடியாதவையாதலால் இப்படியெழுதித் தீரவேண்டியதாயிற்று அவர்க்கு. ஆனாலும் தாம் வியாக்கியானம் செய்ய இழிந்தவராகையாலே மூலத்தைத் தாமே கண்டித்துவிட்டால் நன்றாயிராதே; ஒருவாறு

பொருந்த விடவேணுமென்று மிகவும் சிரமப்படுகிறார் பாவம்! உபலக்ஷணத்வ விசேஷணத் வங்களை இப்படிச் சொல்லலாமோவென்று ஒருவழியில் நுழைகிறார். எந்த வழியில் நுழைந் தாலும் "உய்யும் வகையில்லை தொண்டீர்" என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி யல்லது வேறுண்டோ? உண்டாகில் யாருமுரைக்கலாம்.

15. கீழே உதாஹரித்த மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி *அல்பாக்ஷர மஸந்திக்தம் ஸாரவத்* என்றுப்போலன்றோ வுள்ளது. நீதிமன்றங்களில் பல பேர்கள் நீதிபதி ஸ்தானம் வஹிப்பதுண்டே. "இவர் எழுதி வைத்த தீர்ப்பு எங்குப் போனாலும் மாறாது" என்னும்படியான ஏற்றம் எல்லா நீதிபதிகளுக்கும் கிடைத்து விடுமா? அப்படிப் பட்ட பாக்யசாலி யாரோ வொருவரன்றோ. அதுபோல மணவாளமாமுனிகள் ஸாதித்த நிஷ்கர்ஷமென்றால் "பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" என்று ஆண்டாளருளிச் செய்தபடி யன்றோ விருப்பது. பிறர் வளவள வென்று எத்தனை பக்கம் எழுதி வைத்தாலும் விசதவாக் சிகாமணிகள் எழுதும் ஒரு வரியின் கீழே அத்தனையும் வழவழ வென்றாகு மென்பது அபிமானத்தால் சொல்லுவதன்றே. இதில் தோஷம் சொல்ல நினைப்பவர்கள் "ஸித்தஸாதநம் தோஷ:" என்னலாமத்தனை போக்கி வேறொன்றும் சொல்லப்போகாது. இது நிற்க.

16. "த்ருட பூர்வச்ருதோ மூர்க்க:......என்கிற தசையாம்" என்றவிடத்தில்—"இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில்" என்றிருக்கிறதல்லவா: இதில் இரண்டு கேள்விகள். நாம் நெடுநாளாகக் கேட்டுவருகிறோம். (1) மத்யஸ்த த்ருஷ்டியாலே பிராமாணிகார்த்தங்கள் தோற்றியிருப்ப தாகச் சொல்லப்படுகிற அர்த்தங்கள் எவை? (2) பற்றினது விடாமல் பிறர் பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? ஆக இவ்விரண்டு கேள்விக்கும் விடை வெளிவருமா? இந்த யுகத்தில் வெளிவராதென்று சபதம் செய்திருக்கிறோம். நம்மைத் தூக்கி யெறிந்தாப்போல பதில் எழுதவேணுமே. "வேரி மாறாத பூமேலிருப்பாள்—நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு—நீன்திரு—திருவுக்குந் திரு—தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" இத்யாதிகளான ஆழ்வார் பாசுரங்களும் "ச்ரேயோ நஹ்யரவிந்த லோசந" "ஜகத் ஸமஸ்தம் யதபாங்க ஸம்ச்ரயம்" "சேஷ சேஷாசநாதி ஸர்வம் பரிஜநம்" "ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத்" "ஐச்வர்ய மக்ஷரகதிம்" "ஸ்வத: ஸ்ரீ ஸ்த்வம்" இத்யாதி ஆசார்ய ஸூக்திகளும் "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேச:" "ப்ரபத்யேந்யித: ச்ரியம்" "அலமேஷா பரித்ராதும்" "ஆத்ம வித்யாச" இத்யாதிகளான பாஞ்சராத்ர புராணேதிஹாஸ ச்லோகங்களும் அடுக்கப்பட்டிருக்கின்றன. "மோக்ஷப்ரதே பகவதி இயம் கடகதயா திஷ்டதி" "இவள் புருஷகாரமாய்க் கொண்டு தஞ்சமாகிறாள்" இத்யாதி களைத் தாமே யருளிச் செய்த போது இந்த பிரமாணங்களெல்லாம் எங்கே புக்கொளித் தனவோ? ஒருவர் விஷ்ணுபாரம்யம் சொல்லுவதாகத் தொடங்கி "விஷ்ணுர் நாராயண: க்ருஷ்ண:" என்று அமரகாரன் சொல்லியிருப்பதாலும் 'விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே' என்றும் "ஓம் நமோ விஷ்ணவே ப்ரப விஷ்ணவே" ஸ்ரீமஹாவிஷ்ணும் த்யாயாமி" என்றும் "விஷ்ணோராயதநே வஸேத்" என்றும் "விஷ்ணு பாதே தத்தம்" என்றும் "விஷ்ணு பாதம் பஜாமி" என்றும் "வல்லனெம்பிரான் விஷ்ணுவே" என்றும் முறை யிடுகையாலும் விஷ்ணுவே பராத்பர னென்பதில் என்ன ஸந்தேஹம்? விஷ்ணுவுக்குப்

பாரம்யமில்லையாகில் 'விஷ்ணும் தர்ப்பயாமி' என்று சொல்லித் தர்ப்பணம் பண்ண முடியுமோ? என்றும் இப்படி நினைவுக்கு வருவதையெல்லாம் சொல்லிக் கொண்டிருப்பராம். அதனில் இதற்கு வாசி யொன்றில்லையே! உண்டெனில் உரையீர்.

17. "ஸ்ரீஸூக்த பாஷ்யத்திலே பெரியஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்" என்கிறார். என்ன அர்த்தம் அபேக்ஷிதமோ? அதை எப்படி உபபாதித்தாரோ? இஞ்சிமேட்டழகியசிங்கர் பெரிய வித்வான்; வியாக்கியானம் பண்ண இழிந்த அவராவது விவரிக்கவேண்டாமா? நஞ்சீயர் ஸாதித்த ஸ்ரீஸூக்தபாஷ்யமென்று ஒன்று அச்சில் வந்திருக்கிறதே, அதை அந்த ஸ்வாமி கடாக்ஷியாதவரல்லரே. அதில் உபபாதித்த அபேக்ஷிதார்த்தங்களில் சிலவற்றையாவது எடுத்துக்காட்டக்கூடாதா? பெரியஜீயரும் என்பதற்கு "நாராயணமுனியென்கிற நஞ்சீயரும்" என்று பொருளுரைத்தார். இதுதான் இங்கு அவசியமான விவரணம் போலும். அந்த நஞ்சீயர் என்ன உபபாதித்தாரென்பதை அடியோடு காட்டாமல் தாம் வீணாக ஒரு அபூர்வமான ப்ரமாணம் காட்டுகிறார்.

18. அது என்னவென்னில்; "இங்கு ஸ்வயம் வஸ்தூகுர்வந் ..பத்மாயாஸ் தவச சரணௌ நச் சரணயந்" என்று பட்டர் ஸ்ரீ லக்ஷ்மீ கல்யாணத்தில் நம்மாழ்வார் பாசுரத்திற்கு அர்த்தமாக அருளிச்செய்த ஸ்தோத்ரத்தின் ச்லோகாதிகளும் அநுஸந்தேயங்கள். இதில் பெருமாளுடையவும் பிராட்டியினுடையவும் திருவடிகளுக்கே உபாயத்வம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டதிறே." என்றெழுதியுள்ளார் இஞ்சிமேட்டழகிய சிங்கர். பிராட்டியை மட்டும் தனியே விளித்து உமது திருவடிகளை சரணமாகப் பற்றுகிறேன் என்று இட்ட சுலோகங்கள் பதினுயிரக்கணக்காக இல்லையா? *பகவந்நாராயணேத்யாதி சரணாகதிகத்ய சூர்ணையில் "சரண மஹம் ப்ரபத்யே" என்றிருப்பது ஒன்று போராதா வெற்றிக்கொடி நாட்டுவிக்க? ஸுப்ரஸித்தமானதைவிட்டு அத்யந்தம் அப்ரஸித்தமான தொன்றைத் தேடிப்பிடித்து ப்ரஸங்கிப்பது என்னே?

19. "சரணம் ப்ரபத்யே" என்னப்பெறுகிற வ்யக்திகளுக்கெல்லாம் மோக்ஷ ப்ரதத்வம் வந்துவிட்டதாக எண்ணமோ? அவரவர்கள் தம்தம் ஆசாரியர்களுக்குச் செய்து கொள்ளும் தனியன்களில் 'சரணம் ப்ரபத்யே' இல்லாத் தனியன் தேடிப்பிடிக்க வேண்டியதாகவன்றோவிருக்கும். இவர்களெல்லோரும் மோக்ஷப்ரதர்களாகும்போது பிராட்டிதானு மோக்ஷப்ரதையாக ஆகக்கூடாது. நியாஸதிலகத்தில் *தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ* என்கிறார் ஸ்வாமி. எம்பெருமான் தானும் ஆசாரியர்களின் கட்டளைபெற்றே முக்தியளிப்பதாகப் பணித்தாராயிற்று. இராமானுச நூற்றந்தாதியில் *ஞானங்கனிந்தநலங்கொண்டு* என்கிற பாசுரத்தில் எம்பெருமானைப் போலவே எம்பெருமானாரும் மோக்ஷப்ரதர் என்று சொன்னதோடு நில்லாமல் எம்பெருமானாருடைய மோக்ஷப்ரதத்வத்தின் தன்னேற்றமும் உள்ளபடியுரைக்கப்பட்டுள்ளது. இப்படியிலே பிராட்டியும் மோக்ஷப்ரதையென்றால் தடுப்பாருண்டோ?

20. உபாயத்வ விஷயத்தில் அல்லது மோக்ஷப்ரதான விஷயத்தில் பிராட்டியின் ப்ராமாணிகமான பரிஸ்திதியை ஸகலாசாரியர்களும் ஸமரூபமாகச் சொல்லியிருக்கிறார்களே யொழிய இதில் ஏற்றத்தாழ்வு கூறுகதற்கு அவகாசலேசமும் கிடையாது. கிழே 16, 17 லக்கங்களிட்டு விவரிக்கப்பட்ட விஷயங்களில் வர்ஷசதமானாலும் ஸமஞ்ஜஸமான ஸமாதானம் சொல்ல முன்வரும் ஸஹ்ருதயர் ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோர் தக்ஷிணே உத்தரே ச பார்ச்வே இலரென்று சபதமிட்டு ஸ்ரீபெரும்பூதூர் ஸதஸ்ஸின் உபந்யாஸம் தலைக்கட்டப்பட்டது. ... ... ❁

# எம்பெருமான் ஆராதனைக்கெளியன்.

— இதுவும் உபந்யாஸகர்களுக்கு இடும் விருந்து. செ. 41 —

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி,
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மந:.

இந்த சுலோகம் கீதையில் உள்ளதொரு (9–26.) ச்லோகரத்னம். எம்பெருமான் ஆராதனைக்கு எளியன் என்பது இதன் பரமதாற்பரியம்.

இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் நெடுவாசி பெற்றிருக்கிறான். 'ஆடு பலி கொடு, கோழி பலி கொடு' என்று அருந்தேவைகளையிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான் படியோ அப்படியன்று; நாம் இட்டது கொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம்.

எம்பெருமானுக்கு நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கெனவேயில்லாத வொரு பூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராயவேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்த காமன். அன்னவன் நாமிட்டது கொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பதானது கடல் நிரம்புவதற்காகவன்றே. *வர்ஷ பிந்தோ ரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:* என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) பட்டர் அருளிச்செய்தபடியே மேகம் தான் ஸத்தை பெறுவதற்காகவே கடலிலும் வர்ஷிக்கிறதென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வத: பரிபூர்ணனான பரம புருஷன் திறத்தில் நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கேயன்றி அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடி ஆராதிக்க வேணுமென்பதில்லை; இடுகிற பொருள் எதுவாயினும், இடுவது ப்ரேம பூர்வகமாக வேணுமென்ப தொன்றிலேயே நியதியுள்ளது.

திருமங்கையாழ்வார் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால், புள்ளாய் ஓரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்று பெரிய திருமொழியில் (11–7–6) அருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் இது எம்பெருமானுக்குச் சாத்தத் தக்கது' என்று அத்யவஸாயம் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ள மாட்டோமென்று உரைக்கின்ற இப்பாட்டில் எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; "செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்க வேணுமென்பதில்லை; ஏதேனுமொரு புஷ்பமாக இருக்கலாமென்பதும் பக்திப் பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்பட்டன.

8

*பத்ரம் புஷ்பம்* என்று மேலேயெடுத்த கீதாச்லோகமும், 'இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை; இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா? என்பதொன்றையே பார்ப்பேன்' என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றது. இதில் பக்தி சப்தம் இரண்டு தடவை விழுந்திருப்பது நோக்கத்தக்கது. "யோ மே பக்த்யா ப்ரயச்சதி" என்று பூர்வார்த்தத்திலே சொல்லியான பின்பு உத்தரார்த்தத்தில் (தத்) என்னுமளவே போதுமானது. (பக்த்யுபஹ்ருதம்) என்ற அதிகோக்தியினால் பக்தியொன்றையே அவன் கணிசிப்பனென்று காட்டப்பட்டது. ... ... ❁

## ஸுபாஷித தசகவிவரணம்.

— இதுவும் உபந்யாஸகர்களுக்கு விருந்து. நெ. 42 —

ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய ஸாகரத்தில் அரும்பெருமணிகள்போன்ற சுலோகங்கள் ஸுபாஷிதங்களென வழங்கப்பெற்றுப் பல்லாயிரமுள்ளன. அவைகளில் உபந்யாஸகர்களுக்கு மிக உதவியாகுமிவை.

ஜீவநக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:,
கிம் கநிஷ்டா: கிமு ஜ்யேஷ்டா கடீயந்த்ரஸ்ய துர்ஜநா:. 1

ஏற்றச்சாலுக்கு கடீயந்த்ர மென்று பெயர். துஷ்டர்கள் ஏற்றச்சாலுக்குத் தம்பி களோ தமையன்களோ என்று ஸந்தேஹிக்கிறார் கவி. ஏனெனில்; குணத்தில் ஒற்றுமை யைப் பற்ற. ஜீவந மென்கிற வடசொல் தண்ணீருக்கும் ஜீவிகைக்கும் வாசகம், ஏற்றச் சாலானது தண்ணீரை மொண்டு கொள்வதற்காகத் தாழும்; தாழ்ந்து ஜீவநம் பெற்ற வாறே தாழ்ச்சி யொழிந்து தலையேறி நிற்கும். துர்ஜந ஸ்வபாவமும் இங்ஙனே யாகும். தமக்கு ஜீவிகை வேண்டும்போது தாழ்ச்சி காட்டிக் காலைப்பிடித்து நிற்பர்கள். ஜீவிகை பெற்றவாறே மார்பு நெறித்து வணங்காமுடி மன்னராய்ச் செருக்குற்றிருப்பர்கள்— என்றவாறு. இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தைப் பலகால் ஆவ்ருத்தி செய்யவேணும். ஏனென்னில் தாழ்ந்து நிற்பதும் தலைதூக்கி நிற்பதும் ஏற்றச் சாலுக்கு மாறிமாறி நடத்தல்போல. துர்ஜநங்களுக்கும் இதுவே நித்ய யாத்திரையாயிருத்தலால். ... (1)

கரிஷ்யாமி கரிஷ்யாமி கரிஷ்யாமீதி வாதிபி:,
மரிஷ்யாமி மரிஷ்யாமி மரிஷ்யாமீதி விஸ்ம்ருதம். 2

நல்ல காரியங்களைச் செய்ய நினைப்பவர்கள் "க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுநா தர்மமாசரேத்" என்கிறபடியே தங்களுக்கு மரணம் ஸந்நிஹிதம் என்று நினைத்து அந்த நல்ல காரியங்களைக் காலதாமதமின்றிச் செய்து முடிக்கவேண்டுமே யல்லது 'பார்ப்போம், செய்வோம்' என்றிருக்கலாகாது என்றவாறு. ... ... ... (2)

ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோ ஹி க்ருத்ஸ்நமதிசேதே,
தமிமம் க்ரியமாணக்ந: தமபி துராத்மா கரிஷ்யமாணக்ந:. 3

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது திருக்குறள். *க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:* என்பர் வடமொழியாளரும். பிறர்

செய்த உபகாரங்களை மறப்பவன் பஞ்ச மஹா பாதகிகளுள் சிறந்தவன். பிறர் செய்து கொண்டேயிருக்கிற உபகாரங்களை மறப்பவன் அவனிலும் சிறந்தபாபி. "இவர் நாளைக்கு நமக்கு ஓர் பெரிய உபகாரம் செய்யப் போகிறார்" என்று தெரிந்து கொண்டு முந்தியே அப்பெரியோர்க்குத் தீங்கிழைக்குமவன் ஸர்வோத்க்ருஷ்டமஹாபாபி. [இது ஸங்கல்ப ஸூர்யோதயத்திலுள்ளது.] ... ... ... ... (3)

ஆபத்தக்ருத்ரிமஸடாஜடிலாம்ஸபித்தி:
ஆரோபிதோ ம்ருகபதே; பதவீம் யதி ச்வா,
மத்தேபகும்பதடபாடநலம்படஸ்ய
நாதம் கரிஷ்யதி கதம் ஹரிணாதிபஸ்ய? 4

உலகத்தில் சிங்கம் முதலிய உயர்ந்த ஜந்துக்களும் நாய் முதலிய நிஹீந ஜந்துக்களும் பகவானுடைய ஸ்ருஷ்டியில் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்றினால் ஆகத்தக்க காரியம் மற்றொன்றினால் ஆகாது. சிங்கத்தின் உளைமயிர்களை நாய்க்கு ஏறிட்டு [அதாவது நாய்க்கு சிங்கக்கோலம்போட்டு] அந்த நாயை சிங்கம் வீற்றிருக்க வேண்டுமிடத்தில் உட்காரவைப்பதில் கஷ்டமில்லை; இதை எளிதாகச் செய்துவிடலாம். ஆனால் உண்மையான சிங்கம் செய்யக் கூடிய காரியத்தை அந்த நாய் செய்ய முடியுமா? என்பதுதான் ஆராயத்தக்கது. "மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து, வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதரும்" என்கிற இயல்பு க்ரித்ரிம ஸிம்ஹமாகிய க்ராம ஸிம்ஹத்திற்கு ஒருநாளும் வாய்க்காது என்றபடி. ஒரு மஹாராஜ ஸபையில் ஆஸ்தான வித்வானாயிருந்த ஒரு மஹா பண்டிதனைத் தள்ளி அந்த ஸ்தானத்தில் ஒரு யதாஜாதனைப் பண்டிதக்கோலம் செய்து பட்டுப் பீதாம்பரங்கள் போர்த்து உட்காரவைக்க முடியுமானாலும் கம்பீரமாக வாய் திறந்தொன்று பேசமுடியுமோ? என்பது போன்ற பல விஷயங்களுக்கு இது அந்யாபதேசம். ... ... ... ... ... (4)

ஹேம்ந: கேதோ ந தாஹேநச் சேதேந கஷணேந வா,
ஏததேவ மஹத் து:க்கம் யத் குஞ்ஜாஸமதோலநம். 5

பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம்; உளியையிட்டு வெட்டுகிறோம்; உரைகல்லிலேயிட்டுக் கனக்க உரைக்கிறோம்; இன்னமெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன் சிறிதும் வருந்தமாட்டாது. வருத்தமில்லையென்பது மாத்திரமேயன்று; அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப் பரமபோக்யமே என்பது தோன்ற ஒளியை மிகுத்துக் காட்டுதலும் செய்யும். பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியையிட்டு வெட்டும்போதும் உரைகல்லிலுரைக்கும்போதும் அதற்கு ஒளிமிகுதலைக் காண்கின்றோமன்றோ. ஆனால் அந்த பொன்னுக்கு ஒரு வருத்தம் மாத்திரம் சாலவுண்டு. அஃது என்னென்னில், 'மிக அற்பமானதொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே!' என்கிறவிதுவே அதற்கு மிக்க வருத்தமாம். தராசின் ஒரு தட்டில் குன்றுமணியையும் மற்றொரு தட்டில் பொன்னையுமிட்டு நிறுக்கக் காண்கிறோமன்றோ, பொன் என்று போற்றப்படுகின்ற நமக்கு கடைகெட்ட குன்றுமணிதானா ஈடாகவேணும் என வருந்தி மிகவும் குன்றிப்போகா நின்றதாம்.

இதன் ஸ்வாபதேசார்த்தமாவது—பகவான் தூதனுப்பப் பெறுகை, தாம்பிஞல் கட்டுண்கை—முதலானவற்ருல் சிறிதும் வருத்தமுருன்; அவற்ருல் மிக்க முகமலர்ச்சியும் பெற்றிடுவான். பாண்டவதூதன் என்றும் தாமோதரன் என்றும் சந்தோஷமான திருநாமம் வஹித்து விளங்கவும் காண்கிருேம். *ஒத்தார் மிக்காரை யிலேயாய மாமாயா! என்னப்பட்ட தன்னே அதிக்ஷுத்ரவஸ்துக்களான சிலவற்ருேடே ஒப்பிடுகிருர்களே! என்பதுதான் துக்கஹேதுவாம். "ஒட்டுரைத்திவ்வுலகுன்னேப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ!" என்ருர் நம்மாழ்வாரும். ... ... ... ... (5)

ப்ரயத்ந: கலு கர்த்தவ்ய: மார்ஜாரஸ் தந்நிதர்சநம்,
ஜந்மப்ரப்ருதி கௌர் நாஸ்தி பய: பிபதி நித்யச:. 6

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்றபடி முயற்சிசெய்துகொண்டேயிருந்தால் அவசியம் பலன் கிடைத்தே தீரும். இவ்விஷயத்திற்குப் பூனேயே சான்ருகும். பூனேயானது விலேகொடுத்துப் பசு வாங்குவதில்லே, ஆனுலும் விடாமுயற்சியிஞல் அது பால் குடியாத நாளில்லே. ... ... ... ... 6

லகுஸ் ஸமதுலாருடோ ஹ்யதரீகுருதே குரும்,
அத்ர மத்யஸ்தஜிஹ்வைவ தாரதம்யபரீக்ஷிணீ. 7

உலகத்தில் அல்பனுன ஒரு மனிதன் மிக்க பெரியானேடு ஸமமாகக் கலந்து பழக ஆரம்பித்து உடனே அப்பெரியானேக் கீழேதள்ளித் தான் மேலேறி நிற்க ஆசைப்படுவது இயல்பு. இவ்விஷயத்தை நாம் திராசு தட்டில் காணலாம். ஒரு தட்டில் மிகவும் கனத்ததான வொரு பொருள் இருக்கின்றது; லேசான [அற்பமான] ஒரு பொருளானது அந்த கனத்த பொருளோடு ஸமமாகத் தானும் அதற்கீடான மற்ருெரு தட்டில் ஏறியிருந்துகொண்டு உடனே என்ன பண்ணுகிறதென்ருல், அந்த கனத்த பொருளேக் கீழேயிறக்கிவிட்டுத் தான் மேலேறி நிற்கின்றது. (கனமுள்ள பொருள் தாழ இழிவது இயல்புதானே.) ஆக இப்படி அல்பவஸ்து மேலேறி நிற்கவும் அது கனத்தவஸ்துவைத் தாழ்மைப்படுத்தவும் நேர்ந்தாலும் எந்தவஸ்து உண்மையில் உயர்ந்ததோ, எந்த வஸ்து உண்மையில் தாழ்ந்ததோ இவ்வுயர்த்தி தாழ்வுகளே உள்ளபடி காட்டுவதற்கு ஒரு வஸ்து இருக்கின்றது; அது எது என்னில்;

[மத்யஸ்த்தஜிஹ்வா] இதற்கு இரண்டு பொருள். (1) நடுவிலே இருக்கின்ற நாக்கு. (2) நிஷ்பக்ஷபாதிகளாய் மத்யஸ்தர்களாய் இருக்கின்றவர்களுடைய நாக்கு. துலாக்கோலில் நடுவிலேயிருக்கின்ற நாக்கைக்கொண்டு தாரதம்யம் அறிகின்ருேம். மத்யஸ்த்தர்களாயுள்ளவர்கள் 'இன்னுன் அல்பன், இன்னுன் கனவான்' என்பதை அநாயாஸமாகச் சொல்லி விடுவர்கள் என்றபடி. ... ... 7

த்ருணுத் லகுதரஸ் தூலஸ் தூலாதபி ச யாசக:.
வாயுநா கிம் ந நீதோஸௌ மாமயம் பீடயேதிதி. 8

புல்லேக் காட்டிலும் பஞ்சு லேசு; பஞ்சைக்காட்டிலும் யாசகன் லேசு—என்று ஒருவர் சொன்னுர். அவரைப்பார்த்து மற்ருெருவர் கேட்டார்—நீர்சொல்வது உண்மை

யானுல் காற்றுனது புல்லையும் பஞ்சையும் அடித்துக்கொண்டு போகிறுப்போல யாசகனையும் அடித்துக்கொண்டு போகவேணுமே! அப்படி எங்கும் காணவில்லையே! ஏன்? என்று. அதற்கு அவர் பதில் சொல்லுகிருர்—[மாம் அயம் பீடயேத் இதி] காற்று யாசகனையும் அடித்துக்கொண்டுபோகத்தடையில்லை; ஆனுல் அதற்கு ஒரு பயம்; இந்த யாசகன் அதைக்கொடு இதைக்கொடு, என்று யாரையும் பிடுங்கித்தின்பதையே இயல்வாகவுடையனுதலால் நம்மையும் பிடுங்கித்தின்பன் என்று அஞ்சியே காற்றுனது யாசகனைக் கொண்டுபோவதில்லை என்று. ... ... ... 8

கும்ப: பரிமிதமம்ப: பிபதி, பபௌ கும்பஸம்பவோம்போதிம்,
அதிரிச்யதே ஸுஜந்மா கச்சித் ஜநகாத் நிஜேந சரிதேந. 9

உலகத்தில் சிலபேர்கள் தாங்கள் தம் தந்தையிற் காட்டிலும் அதிசயித்த செய்கையையுடையவர்களாக ஆவதுண்டு. இதற்கொரு த்ருஷ்டாந்தம் காணலாம். குடமானது ஒரு மரக்கால் அல்லது இரண்டு மரக்கால் ஜலத்தையே கொள்ளக்கூடியது; குடத்தில் நின்று பிறந்தவரான அகத்திய முனிவரோ வென்னில், கடல் முழுவதையும் பருகவல்லவரானுர். ஜநகமான குடத்தின் செய்கையிற் காட்டிலும் தஜ்ஜந்யரான முனிவரின் செய்கை மிக அதிசயித்ததாயிற்றன்றே. அகத்தியர் கடல் பருகின வரலாறு புராணப்ரஸித்தம். ... ... ... 9

அதஸீஸுமஸுகுமாராத் அவயவஸௌந்தர்யலேசஜிதமாராத்,
கோஸலஸுதாகுமாராத் கோந்யோ தேவ: கரோது ஸுகமாராத். 10

முற்காலத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர் ஒரு ஈசப்ரபுவிடத்தில் யாசகத்திற்குச் சென்றுர். அந்த பிரபுவுக்கு மாராத் என்று பெயர். 'என் பெயரையிட்டுக் கவிபண்ணினீராகில் காசு கொடுக்கிறேன்' என்று கூறின அந்தப் பிரபுவை திருப்தி படுத்த விரும்பிய பண்டிதர் "வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்றி என்கிற தமது உறுதியையும் விடமாட்டாதவராய் இந்த ச்லோகத்தை உடனே இயற்றிக் கொடுத்தாராம். 'மாராத்' என்கிற பெயர் இதில் அடிதோறும் வந்திருக்கின்றது. ஆனுல் ச்லோகம் முழுவதும் ஸ்ரீராமபிரான் விஷயம். (அதஸீஸுமேத்யாதி.) காயாம் பூப்போல் ஸுகுமாரனுயும், வடிவழகின் ஏகதேசத்தினுல் மன்மதனை வென்றவனுயுமிருக்கிற கௌஸல்யாகுமாரனைக் காட்டிலும் வேறு எந்த தெய்வம் விரைவில் நன்மை செய்யும் என்பது கருத்து. மூன்றுவது பாதத்தில் 'கோபாங்கா' என்றும் பாடமுண்டு. ... 10

## ஓரெழுத்தினுல் நாலெழுத்து வீண்.

இந்த மகுடத்தை நாமே விவரித்தாக வேண்டும். வடமொழி வேதத்தை முறைப்படி யோதினவர்கள் வர்ணமோ ஸ்வரமோ மாத்திரையோ சிறிதும் வழுவாதபடி மிகவும் ஜாகரூகர்களாய் அத்யயந அத்யாபநங்களை நடத்தி வருகிருர்கள். வேத பாராயணத்தில் ஒருவருடைய வாக்கில் ஸ்வல்ப விபர்யயம் கண்டாலும் பாராயணம் முடிந்தவுடனே பிரபலமான சர்ச்சை விளைவதை ஆங்காங்குக் கண்டு வருகிறேம்.

9

தென்மொழி வேதமும் இத்தகைய கட்டளேக்கு உட்பட்டதே. ஆனால் இதில் ஸ்வர நியதியில்லாமையினாலே ஆசார்யமுகமாக அக்ஷரராசி க்ரஹணம் பண்ணாமல் சிலர் சுவடி பார்த்தும் சிந்தனை பண்ணி அத்யாபகர்களாகி விடுகிறார்கள். அன்னவர்களால் அருளிச் செயல்களில் விளையும் விபர்யயங்கள் அபரிமிதம். பெரிய திருமொழியில் தேரழுந்தூர்ப் பதிகமொன்றில் (7-5-3.) *செம்பொன் மதிள்சூழ் தென்னிலங்கைக் கிறைவன் சிரங்கள் ஐயிரண்டும்* என்பது ஒரு பாதம். இதில் 'சிரங்கள் ஐயிரண்டும்' என்பதைச் சந்தி செய்து பதிபித்தவர்கள் "சிரங்களை யிரண்டும்" என்று அச்சிட்டிருப்பதால் 'லங்கேச் வரனுக்குச் சிரங்கள் ஐயிரண்டல்லவா' என்கிற விவேசனமுமின்றியே "சிரங்களை இரண்டும்" என்றே உருப்போட்டு கோஷ்டிகளிலும் ஸேவித்து வாுவாருளர். இங்ஙனே யெடுத்துக்காட்டப் புகுந்தால் நூற்றுக்கணக்கில் காட்டமுடியும். அவை கிடக்க. "ஓரெழுத்தினால் நாலெழுத்து வீண்" என்ற மகுடத்திற்குச் சேர ஒரு விஷயம் கேண்மின். காழிச் சீராம விண்ணகரப் பதிகத்தின் இரண்டாவது பாட்டின் மூன்றுமடியின் பிற்கூற்றைத் "தொல்குருகு சினையென்னச் சூழ்ந்தியங்க எங்கும்" என்று பலர் ஓதி வருகிறார்கள். *ஒரு குறளாயென்று தொடங்குமிப்பதிகம் எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தத்திலமைந்தது. ஒருகுறளா யிருநிலமூ வடிமண் வேண்டி உலகனைத்து மீரடியா லொடுக்கி யொன்றும் என்கிற முதற்பாட்டின் முதலடியை யெடுத்துக் கொள்வோம். இதில் எட்டுச்சீர்கள் உள்ளன. முறையே காய்ச்சீர் இரண்டும், மாச்சீரிரண்டும், மறுபடியும் காய்ச்சீரிரண்டும் மாச்சீரிரண்டுமாக எண்சீர்கள் அமைந்துள்ளன. காய்ச்சீ ரென்றாலென்ன? மாச்சீரென்றாலென்ன? என்பதை இங்கு நாம் விவரிக்க விரும்பு கின்றிலோம். தமிழறிந்தவர்களிடம் கேட்டறிக. மேலே நாம் காட்டின அடைவு தவறாமல் பாட்டுத்தோறும் அடிகள் தோறும் சீர்கள் பிறழாமல் அமைந்துள்ளன. இனி, மேலே நாமெடுத்துக் காட்டிய (தொல்குருகு) என்னும் பகுதியை யெடுத்துக் கொள் வோம். தொல்குருகு—காய்ச்சீர், சினையென்ன—காய்ச்சீர். சூழ்ந்தி யங்க—இரண்டு மாச்சீர்கள். ஆக, குறையற முற்றிற்று. இதற்குமேல் எங்கும் என்று ஓதப்பட்டு வருகிறதே, இது எந்த அடியில் சேரக்கூடும்? என்றால் ஓரடியிலும் சேராது. எடுத்தெறிய வேண்டியதாகும். இவ்வனர்த்தம் எதனால் வந்ததென்னில்; (தொல்குருகு) என்றதற்குப் பிறகு (சினையென்ன) என்றது பிசகு. (ன்) என்கிற ஓரெழுத்தை நீக்கிவிட்டுப் பாருங்கள். (சினையெனச்சூழ்ந்) என்கிற வளவும் ஒரே சீர். அதாவது காய்ச்சீர். [கருவிளங்காய்ச்சீரென்றபடி.] இதன்மேல் (தியங்க) (எங்கும்) இவை இரண்டு மாச்சீர்கள். இப்போது (எங்கும்) என்பதில்லையானால் வ்ருத்தபங்கமென்கிற குற்றம் புகுந்து தீரும்.

"ஓரெழுத்தினால் நாலெழுத்துவீண்" என்ற மகுடம் இப்போது பொருள் பட்டதாகும். மீண்டும் கேண்மின். (தொல்குருகுசினையென) என்னுமிடத்தில் (ன்) என்கிற ஓரெழுத்தைச் சேர்த்ததனால், (எங்கும்) என்கிற நாலெழுத்தில்லாமலே அந்த மூன்றுமடி வழுவறப் பொருந்தி விட்டதாம். 'இது வொரு ப்ரமாதமா? ஓரெழுத்துத் தானே' என்றும், அவ்வோரெழுத்தினால் பொருளில் வழுவில்லையே யென்றும் வாதாட வருமவர்களுக்கு நாம் சொல்லக்கூடியதொன்றுமில்லை. யாப்புப்பிறழ்வு என்பது பற்றி யன்றோ இங்கு நாம் இவ்வளவு விவரித்தது.

உபதேசரத்தினமாலையின் முடிவான சாத்துப் பாசுரத்தில் "சிந்தைதன்னில் நாளும் சிந்திப்பார்" என்ற இரண்டாமடியிலும் ஓரெழுத்தினால் தளைவழுவுண்டாவதை ப்ராஸங்கிகமாகத் தெரிவிக்கிறேன். சிந்தைதன்னில்—கூவிளங்காய்ச்சீர்; நாளும்—தேமாச்சீர்; இதற்குமேல் "மாமுன் நிரையும்" என்ற இலக்கணப்படி நிரையசை வர வேண்டும்; நேரசையே வந்துள்ளது. இதைத் தவறென்றே சொல்லவேண்டும். இந்தத் தவறும் (ன்) என்கிற ஓரெழுத்தினாலாயது. சிந்தை—தனினாளும்—சிந்திப்பார். என்றால் வழுவொன்றுமில்லை. நிற்போம். ... ... ... 

# ஸ்ரீமதுபயவே. S. ஸத்யமூர்த்தி ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவ நிகழ்ச்சி.

மத்ய ப்ரதேசத்தில் குவாளியர் மகாநகரத்தில் சிறப்புடன் வாழும் ஸ்ரீ ஸத்ய மூர்த்தி ஸ்வாமியைத் தென்னாட்டிலும் வடநாட்டிலும் தெரிந்துகொள்ளாதாரிலர். தமிழிலும் ஆங்கிலத்திலும் ஆச்சரியமான எழுத்தாளரென்றும் மஹா மேதாவி யென்றும் புகழ்பெற்ற விவரைப்பற்றி நாம் அதிகம் எழுத விரும்பவில்லை. இவருடைய ஆங்கில மொழி பெயர்ப்பு வியாஸங்கள் பலபல நமது ஸ்ரீ ராமாநுஜனில் வெளிவந்துள்ளன. வெளிவரவேண்டியவையுமுள்ளன. தமிழ் வியாஸங்கள் பல பத்திரிகைகளில் வெளி வந்து கொண்டிருக்கின்றன. ஆங்கில வியாஸங்களின் பெருமையைப் பேச நமக்கு யோக்யதை யில்லையாயினும் ஆங்கிலத்தில் ஆழ்ந்த அறிவு வாய்ந்த பலபல மேதாவிகளின் மூலமாக நாம் கேட்டிருப்பது அதிசயமாகவே. உலகமறிந்த விதனைப் பற்றி நாம் பன்னிப்பேச வேண்டுமோ? ஸ்தோத்ரரத்ன மென்று ப்ரஸித்தமான ஆளவந்தார் ஸ்தோத்ரத்திற்கு இவர் ஸமீப காலத்தில் ஆங்கிலத்தில் எழுதியுள்ள விரிவுரையை [விரைவில் அச்சிட விருப்பதை] நம்முடைய நண்பர் பலர் வாசித்துப் பார்த்து வியந்து கூறினதிலிருந்து வியப்படைந்த நாம் அதை விரைவில் உலகமெல்லாமனுபவிக்கச் செய்யவேணு மென்கிற குதூஹலமுடையோம்.

இந்த ஸ்வாமிக்கு நேற்று 9—6—67ல் (வைகாசி மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில்) அறுபதாண்டு நிறைவு ப்ராப்தமாயிற்று. தமிழ்நாட்டுத்திலகமான விவர்க்கு நமது நாட்டி லேயே இச்சிறப்பு நடைபெற வேண்டியிருந்தும் நெடுநாளாகத் திருக்குமாரர்கள் முதலானாரோடு தாம் வாழ்ந்து வருமிடமான க்வாளியர்ஸிடியிலேயே நடைபெற்றது. அதைப்பற்றி நமது ஸ்ரீ ராமாநுஜனில் சிறிது விரிவாக வெளியிட வேணுமென்னுமவா வினால் நிகழ்ச்சிகளைத் தெரிவிக்குமாறும் Photo காபிகள் அனுப்புமாறும் பிரார்த்திக்க, ஸ்வாமி தாமே கருணைகொண்டு எழுதிய கடிதம் அப்படியே வெளியிடப்படுகிறதிங்கு.

"ஸ்ரீமதித்யாதி......ஸன்னிதியில் அடியேன் செய்யும் விண்ணப்பம். (21-6-67.) 16—6—67 தேதியுள்ள ஸ்ரீமுகம் இன்று கிடைத்தது. ப்ரஸ்துதத்தன்று பந்தலில் மாலை யுடன் Photo எடுப்பதற்குப் பையன்கள் தங்களுடைய ஸொந்த Camera வையே நம்பி யிருந்தார்கள். ஆனால் ஸமயத்தில் அது த்ருப்திகரமாக வேலை செய்யவில்லை. அன்று ஸாயங்காலம் பந்துவர்க்கங்களுடன் விதவிதமாக Groop Photo எடுக்கப்பட்டன. அவையும் இன்னும் தயாராகி வந்தபாடில்லை. தேவரீர் திருவுள்ளமுகக்கும்படி ப்ரத்யேக மாக Photo எடுப்பித்து விரைவில் அனுப்பி வைக்கிறேன். 10 நாளைக்குள் தேவரீர்க்குக்

கிடைக்கக் கூடும். இந்த ப்ரஸ்துதத்தில் ஒரு தனி விசேஷமென்ன வென்றால், அடியேனுடைய மாமனார் ஸ்ரீஉவே. பிரதிவாதிபயங்கரம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமிக்கு அன்றைய தினமே எண்பதாவது திருநக்ஷத்ரம் தொடக்கமாகி அதை சதாபிஷேகமாய் மந்த்ர பூர்வகமாகக் கொண்டாடும் பாக்கியம் அடியேனுக்கு வாய்த்தது. அசிந்திதமாக அவர் ஸ்வாமியர்க்கு எழுந்தருளினதே ப்ரஸ்துதத்திற்குத் தனிச் சிறப்பை விளைத்தது. புதுடில்லியிலிருந்து ப்ரஸித்தி பெற்ற இரண்டு ப்ருஹஸ்பதிகள் எழுந்தருளியிருந்து திருப்திகரமாக நடத்தி வைத்தார்கள். உற்றாருறவினர்களும், ஸ்ரீ. T. C. A. ராமாநுஜாசாரியர் (I. A. S.) குடும்பத்துடன்; ஸ்ரீ. S. ராஜன் I. C. S. தம்பதிகள் மற்றும் அனேகரும் பரம ப்ரீதியாய் வந்திருந்து ப்ரஸ்துதத்தைப் பரிமளிக்கச் செய்தார்கள். முன்னுடியே தொடங்கி திவ்ய ப்ரபந்தம் நாலாயிரமும் ஸேவிக்க வாய்ப்பு ஏற்பட்டது. வேத பாராயணத்திற்குத் தான் வசதியில்லாமற்போயிற்று. அன்று ஸாயங்காலம் தற்கால நாகரீகத்தின்படி லௌகிகப் பிரமுகர்களின் குழுவும் கூடியது. ………ஆக இவ்வளவும் ப்ரஸ்துதத்தின் நிகழ்ச்சிகளையெழுதிவிட்டு, மேல் இந்த ஸ்வாமி தமக்கு அடியேன் பால் நெடுநாளாகவுள்ள அன்புமார்வமுமடியாக ஒரு விஷயம் தெரிவித்திருக்கிறார். அதையும் கேண்மின்.

“அடியேனுக்கு வெகு காலமாகவுள்ள ஒரு மனோரதத்தை ஸ்வாமிக்குப் பலகால் விண்ணப்பித்திருக்கிறேனே; அதாவது, தேவரீருடைய ஸகல நூல்களையும் முதலில் ஆங்கிலப் படுத்தி, பின்பு ஹிந்தி குஜராத் வங்காள பாஷைகளிலும் மொழி பெயர்ப்பித்து லோகோபகாரம் பண்ணுவதற்குப் பாங்கான வசதிகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுவது மிக அவசியமென்பது அடியேனுடைய உள்ளத்தில் இடையறாது உலாவிக் கொண்டிருப்பதொன்று. நாற்றிசையும் சென்று பிரசாரம் செய்ய வேண்டுவதும் அவசியமே. இதற்குத் தகுந்த அதிகாரிகளையும் ஸித்தப்படுத்த வேணும். ராமகிருஷ்ண மிஷனைப்போலவே ராமாநுஜாமிஷனும் பெலப்பட வேணும். இத்தகைய பாரிப்புகளை யெல்லாம் ஒரு ஸதஸ்ஸு கூட்டி விண்ணப்பித்துக் கொண்டேன். எம்பெருமானுடையவும் எம்பெருமானாருடையவும் திருவருளால் பலன் காணலாகும்.”

ஆக இவ்வளவும் ஸ்ரீ ஸத்யமூர்த்தி ஸ்வாமியின் ஸ்ரீ முகத்திலுள்ள விஷயங்கள். அன்றைய நிகழ்ச்சிக்கு ஞாபக சின்னமாக ஸ்வாமியால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட வொரு சிறு புத்தகம் அச்சாகி வெளிவந்துள்ளது. அதில் உபநிஷத் விமர்சமாக ஒரு வியாஸமும், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தி விமர்சமாக மற்றொரு வியாஸமும் ஸஹ்ருதய ஹ்ருதய ரஞ்ஜகமாக வெளிவந்துள்ளது. அபேக்ஷகர்கள் To Sri S. Sathyamoorthi Iyengar 9, 10 Premnagar Gwaliar City. Gwaliar 3 (M. P.) என்கிற விலாஸத்திற் கெழுதித்தருவித்துக் கொள்ளலாம்.

நமது ஸம்பிரதாயத்திலும் ஆழ்த்த ஞானம் பெற்று இடைவிடாது லோகோபகாரங்களிலேயே சிந்தை செலுத்தி வரும் இந்த ஸ்வாமிக்கு நாமெல்லோரும் பல்லாண்டு பாடக் கடமைப் பட்டிருக்கிறோமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன். … … ❁

வாழ்த்து வெண்பா.

சத்திய மூர்த்தியெனும் சார்வான பேருடையார்
மத்திமமா மண்டலத்தில் வாழ்பவர்தாம்—பத்திமிகு
நெஞ்சினொடும் நின்மலமா நிட்டையொடும் நீடுலகில்
செஞ்சொலுற வாழ்வர் சிறந்து.

P. B. Annangaracharya.

# ஸ்ரீமான் R. ஸ்ரீநிவாஸய்யங்கார்.

திருவல்லிக்கேணியில் வாழ்பவரான இப்பெரியாரை அறியாதாரில்லை. விசுவாவஸு பங்குனி விசாகமலராக வெளியிட்ட ஸ்ரீவைஷ்ணவ ஹஸ்தபூஷணத்தில் இவரைப்பற்றி வாசித்திருக்கிறீர்களென்பதை நினைவூட்டுகிறேன். இவர் சென்னை ஸிம்ப்ஸன் அண்டு கம்பெனியில் நெடு நாள் உத்யோகஸ்தராயிருந்து ஸமீப காலத்தில் விச்ராந்தி பெற்றிருக்கிறார். ஸ்வாசார்யரான ஸ்ரீமதுபயவே, கோயிலண்ணன் ஸ்வாமி ஸந்நிதியில் க்ரந்தாந்வயம் பெற்று ஸம்ப்ரதாய க்ரந்த விமர்சங்களில் ஊன்றியிருக்கிறார். இவரிடத்தில் நாம் வெகுநாளாகக் கண்டிருக்கிற விசேஷம் ஒன்றே. (அதாவது) நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் மிகத் திடமான நம்பிக்கையுடைமையை இவர் தமக்குத் தனிச்செல்வமாகக் கொண்டிருக்கிறாரென்பதே. இவர் பேசுவதைப்பார்க்கும்போது, இவர்க்கு என்ன தெரியும்?' என்று நினைக்கும் படியாகத்தானிருக்கும். பேனாவைக் கையிலெடுத்துக் கொண்டாராகில் 'மிகத் தெளிந்த ஞானமுடையவர்' என்று எவரும் அறுதியிடும்படியாக ஸித்தாந்தப் பொருள்களை வரைந்திடுவர். நேற்று சித்திரை மாதத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் நடந்த வைணவ மகாநாட்டில் பக்தர்களுக்கெல்லாம் இவர் அளித்திருக்கும் ஒரு சிறு நூல் விருந்து இங்கே அன்பர்களுக்கு நினைவூட்டப்படுகிறது.



Sri R. Srinivasayyangar, Madras.

ஸமீப காலத்தில் இவர் நமக்கெழுதிய கடிதமொன்றில் சில விஷயங்களையெழுதி, ஸ்ரீராமாநுஜனில் இதை வெளியிடவேணுமென்று கோரியிருந்தார். அப்படியே இங்கு வெளியிடலாகிறது.—"நான் ஸ்ரீராமாநுஜன் ஆரம்ப ஸஞ்சிகை முதலாகவே ஒன்றையும் விடாது வாசித்து வருகிறேன். இதேபோல் ஸ்வாமியின் அம்ருதலஹரீ பத்ரிகையையும் ஆரம்பம் முதல் 197, ௳. வரையில் வாசித்து வந்திருக்கிறேன். இவ்விரண்டிலும் ஒரு ஏடும் விடாமல் காப்பாற்றியும் வைத்திருக்கிறேன். சிறிதுபோது பார்த்துவிட்டு மறுபடியும் எடுத்துப்பார்க்க வேண்டாதபடி எறியப்படும் பத்ரிகைகள் போலல்லாமல் ஒவ்வொரு ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவரும் உயிருள்ளவரையில் அடிக்கடி யெடுத்துப் பார்த்து ஸதா அநுபவித்துப் பயன்படுத்திக் கொள்ளவேண்டிய விஷயங்கள்

மலிந்த இப்பத்திரிகைகள் இவ்வுலகில் நீடூழி விளங்க வேண்டியவை யென்பதை நான் பல பெரியார்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். நானும் என்னனுபவத்தினால் அறிவேன். பின்புள்ளார்களுக்கும் பஞ்சமில்லாமல் இவை கிடைக்கும்படியான வழி செய்தேயாக வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறேன். வெளிவந்திருக்கும் விஷயங்களைக் கோர்வையாக எடுத்துத் திரட்டிப் பத்துபன்னிரண்டு வால்யங்களாக ஆயிரம் ப்ரதிகளுக்குக் குறையாமல் அச்சிட்டு வைக்க வேணும், ஸகலலைப்ரெரிகளுக்கும் அனுப்பிவைக்க வேணும் என்று முடிவு செய்திருக்கிறது. இது மிகப்பெரிய காரியமேயொழிய சிறிய காரியமன்று; பலதனிகர்கள் கூடிச்செய்து முடிக்கவேண்டிய காரியமிது. பெங்களூர், மைஸூர், கோயம்புத்தூர், சேலம், ஈரோடு முதலான விடங்களில் ஆப்தப் ப்ரமுகர்கள் பலர் டொனேஷன் உதவி செய்வதாக வாக்குறுதி கூறியுமிருக்கிறார்கள். இப்பணி ஆரம்பம் செய்யப்பட்டு விட்டதென்றே நினைக்கலாம். மற்றும் விவரங்கள் விரைவில் வெளியிடப்படும்—என்பதாக. ... ... ... 

## ஸ்ரீமான் வித்யாநிதி கரி. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி.

ஆந்திர மண்டலத்தில் விளங்கும் ப்ரபல வித்வான்களுள் அக்ரேஸரராகப் பரிகணிதர் ஸ்ரீமத் கரி. ராமாநுஜாசார்ய ஸ்வாமி. இவர் ஸிம்ஹாசலக்ஷேத்ரத்தைச் சேர்ந்தவர். இப்போது இரண்டொரு வருஷகாலமாக ஸிம்ஹாசலத்திலேயே வாழ்பவர். இதற்கு முந்தி (பந்தர் ஸமீபம்) சிட்டிகூடூர் ஸம்ஸ்க்ருத காலேஜிலும் விஜய நகரம் ஸம்ஸ்க்ருத காலேஜிலும் நாற்பது வருஷங்களுக்குமேலாக வியாகரண ப்ரவசனம் செய்து விச்ராந்தி பெற்றவர். முதிய வயதிலிருப்பவர். மஹாபாஷ்யாந்தம் வியாகரணம் பல கால் பல வித்யார்த்திகளுக்கு ப்ரவசனம் செய்தவர். வெறும் வித்வானல்லர். ஆழ்ந்த விமர்ச விசாரதர். ஸிம்ஹாசலம் ஸ்ரீகூர்மம் முதலான சில க்ஷேத்திரங்களில் தமிழ் பேசக் கற்றவர்களும் சிலர் வாழ்வதுண்டே; அப்படிப்பட்டவர்களில் ஒருவரிவர். ஆனால் அந்த ப்ராந்தத்தில் தமிழ்லிபி பயின்றவர்கள் இல்லையென்றே சொல்லலாம். இந்த ஸ்வாமி சிரமப்பட்டுத் தமிழ்லிபியையும் எளிதாக வாசிக்கக் கற்றுவிட்டார். முக்கியமாக அடியேனுடைய வெளியீடுகளை வாசிப்பதற்கென்றே இந்த சிரமம் கொண்டதாகவும், சிரமம் ஸபலமாகப் பெற்றுவருவதாகவும் அடிக்கடி தெரிவித்து வருகிறார். ஒவ்வொரு மாதமும் ஸ்ரீராமாநுஜனைப்பெற்று வாசித்த பிறகு ஸந்தோஷ ஸ்ரீமுகங்கள் ஸாதித்தே தீருவர். நியமேந ஸம்ஸ்க்ருதத்தில்தா னெழுதுவர். சென்ற மாதத்து 222, நெ. ஸ்ரீராமாநுஜனைக் கடாக்ஷித்துவிட்டு நீண்டதொரு வியாஸம் (ஸம்ஸ்க்ருதத்தில்) எழுதியனுப்பி இதை வைதிக மநோஹராவில் வெளியிடவேணும், அல்லது தமிழில் மொழிபெயர்த்து ஸ்ரீராமாநுஜனிலேயே வெளியிட்டால் நலம் என்று தெரிவித்திருக்கிறார். வைதிக மநோஹராவில் இத்தகைய விஷயங்களுக்கு அவகாசம் நேராது. பூர்த்தியாகத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவதென்றால் மிகமிக விரிவாகும். அறவே உபேக்ஷித்து விட்டால் நன்றாயிராது. அந்த ஸ்வாமி, பத்து பக்கங்களுக்குமேல் எழுதியுள்ள விஷயங்களைப் பத்தெட்டு வாக்கியங்களில் தெரிவித்து முடிக்கிறேன். நமது தென்னாட்டிலுள்ள பல ஆப்தர்களும் அடிக்கடி தெரிவிக்கும் விஷயங்களே பெரும்பாலுமிவை.

மேலே குறித்த ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீ முகத்திலுள்ள முக்கியமான விஷயங்கள்.—ஸ்ரீ ராமாநுஜனில் பல வித்வான்களின் வியாஸங்களைப் பற்றின ஆராய்ச்சிகளை ஆழ்ந்து விமர்சித்து வருகிறேன். இப்படிப்பட்ட ஆராய்ச்சிகள் ஒன்றிரண்டல்லாமல் பல நூற்றுக்கணக்காக வெளிவந்து கொண்டிருப்பதை விடாமல் வாசித்து வருகிறேன். உபந்யாஸ சதத்வயம் வெளிவந்தபோது அதில் 94, 95, 96, 97, 98, 99 லக்கங்கொண்ட உபந்யாஸங்களைக் கண்டும் அவைகளுக்கு ஒரு பதிலுமெழுதாமல் ப்ரதித்வந்த்விகள் எப்படித்தான் இருக்கிறார்கள் என்று விசாரப்பட்டுக் கொண்டிருந்தேன். நேற்று 222ல் உத்தமூரர் வியாஸவிமர்சம் முதலான ஐந்தாறு வியாஸங்களை வாசித்தபோது இந்த விமர்சங்களுக்கு லக்ஷ்ய பூதர்களான பண்டிதர்கள் அல்லது வித்வான்கள் இப்போது ஜீவித்திருப்பவர்களா? அல்லது *யச: காயேந ஜீவதியில் சேர்ந்தவர்களா? என்று ஸந்தேஹமுண்டாயிற்று. வியாஸம் போகிற சைலியைப் பார்க்கையில் இப்போது வாழ்பவர்களென்றே தெரிய வருகிறது. இவ்விடத்தில் (ஸிம்ஹாசலத்தில்) ஐந்தாறு வித்வான்கள் நல்ல விவேகிகளாக இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் இந்த வியாஸங்களை வாசித்துக் காட்டி உபபாதனமும் செய்தேன். 'ப்ரதிபக்ஷிபாவனையோடு ஆலோசித்துப் பார்த்து உங்களுக்குத் தோன்றுகிற ஸமாதானங்களைச் சொல்லுங்கள், கேட்போம்' என்றும் விஜ்ஞாபித்தேன். "அபநீதசிரஸ்த்ராணுச் சேஷாஸ் தம் சரணம் யயு:" என்கிற ரகுவம்ச சுலோகத்தை ஒருவர் எடுத்துரைத்தார். இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொரு ச்லோகம் சொன்னார். 'அவர்கள் ஏதாவது பதில் எழுதியிருந்தால் அது நமக்குக் கிடைக்க வழியில்லாமற்போனாலும் ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவே அதைத் தெரிந்துகொள்ள வழி ஏற்படுமே' என்று அடியேன் சொன்னது. இவை மத ஸம்பந்தமாகவோ கலாபேத ஸம்பந்தமாகவோ இல்லாமல் பொதுவாக வித்யாபரிச்ரமப்பட்டவர்கள் விமர்சிக்கும் விஷயமாயிருப்பதால் இவ்விஷயங்களெல்லாம் வித்வான்களுக்கு ரஞ்ஜகங்களாகவே யிருக்கின்றன வென்பதை விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்."

பத்ராதிபர் குறிப்பு:—மேலேகண்ட ஸம்ஸ்க்ருத ஸ்ரீமுகம் பத்துபக்கமுள்ளதானாலும் ஸாராம்சம் இதுவே. அந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீமுத்தை அப்படியே வெளியிடவேணுமென்கிற அவாவும் நமக்குண்டு. விதிவாய்க்கின்று வாய்க்கும். ... ... ❁

## ஸ்ரீரங்கநாத பாதுகாஸமீக்ஷா.

15—6—67 வெளியீடாகிய பாதுகாபத்ரிகை வரப்பெற்றோம். பரமானந்தம் உள்ளடங்காமல் இது எழுதப்படுகிறது. "ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயம்—ஸ்ரீரங்கம்" என்னும் மகுடமுள்ள பக்கத்தைப் பூர்த்தியாக வாசித்து உள்ளம் பூரித்தபடியை எந்த வாக்கியங்கள் கொண்டு வெளியிடுவது! "இந்த வித்யாலயம் ஆரம்பிக்கப்படுகிறது" என்றுள்ளது. "ஆரம்பிக்கப்பட்டுவிட்டது" என்றும் "வித்யார்த்திகளும் உபாத்யாயர்களும் மனோரதித்தபடிக்குமேலாக வந்து சேர்ந்து விட்டார்கள்" என்று பிரசுரமாகும் பத்ரிகையை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறோம். ஸ்ரீபெரும்பூதூரிலும் திருமழிசையிலும் சென்னை நாராயண முதலி வீதியிலும் ..மற்றும் பல விடங்களிலும் சாஸ்த்ர ப்ரவசனங்

களோடுகூட நடந்து கொண்டிருந்த வித்யாசாலைகள் த்ரவ்ய உபபத்திக்குறைவினுல் நிற்கவில்லை; புஷ்கலமான உபபத்திகள் இருந்தும் வித்யார்த்திகளின் தௌர்லப்யம் காரணமாகவே நின்றதாகத் தெரிய வருகிறது. அந்த தௌர்லப்யத்தின் காரணத்தைப் பரிஹரிக்க ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளம்பற்றியிருப்பதாகத் தெரிய வருவதால் இனி வித்யார்த்திகள் அருமைப்பட மாட்டார்களென்று தோன்றுகிறது. கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதாஸூரி மஹாஸ்வாமி ஒரு ஸமயம் ஸாதித்தருளினதாவது—'வித்யாலயம் என்று வழங்காமல் வித்யாசாலை, பாடசாலை என்றே வழங்கி வந்தால் நன்றாயிருக்கும்; வித்யாலயமென்பதனுலேயே வித்யைக்கு லயம் விளைகிறதோவென்று சங்கிக்கவேண்டிய தாகிறது'' என்று. இதையும் உண்மையாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. *வர்த்ததாம் அபிவர்த்ததாம்* என்று நெஞ்சார வாழ்த்தி நிற்கிறோம்.

மற்றொன்று. (ஸமுத்போதனரூபம்.) ஸ்ரீமதாண்டவனுடைய ஷஷ்டியப்தபூர்த்தி விழாவின் ப்ரக்ரியைகளை விளக்கி வருகையில் "ஸதஸ்ஸில் அந்வயித்த வித்வான்கள்" என்ற மகுடத்தின்கீழ் "வானமாமலை சேஷாத்ராச்சாரியர் திருவழுந்தூர்" என்று ஒருவரி காண்கிறது. தேரழுந்தூர் உண்டு; திருவிந்தளூர் உண்டு. திருவழுந்தூர் இந்நிலவுலகத்தில் இல்லை. திருவிழந்தூர் என்றெழுதாமல் திருவழுந்தூர் என்றெழுதினதற்கு ஸந்தோஷப்படவேண்டியதே.

இதற்குமேல், உப்பிலியப்பனும் போய் ஒப்பிலியப்பனும் போய் 'ஒப்புலியப்பன் கோவில் என்று' புகுந்துள்ளது. ஸாமாந்யக்ராமங்களின் பெயர்களை எப்படியும் விகாரப் படுத்தலாம்; திவ்யதேசங்களின் திருநாமங்களை க்ஷேபம் செய்வது கண்டால் நமதாண்டவன் திருவுள்ளமும் கன்றும். ஏற்கெனவே நாம் நிர்வேதத்துடன் தெரிவித் திருந்தபடி (அல்லது ப்ரார்த்தித்திருந்தபடி) பிழைகள் பரிஹரிக்கும் வழியில் கண் செலுத்துவாரில்லை. வியாஸங்கள்தோறும் பிழைகள் மலிகின்றன. ஆனுலும் சிறிது அவதானமுள்ளதென்று மகிழ்வோம்.

ஸதஸ்ஸின் நிகழ்ச்சிகளைத் தெரிவித்து முடித்தபின் 'இப்படி ஸதஸ்ஸுக்கள் நடப்பதுதான் எம்பெருமானுர் திருவுள்ளத்திற்கு உகப்பானதென்று பலரும் போற்றினுர்கள்' என்றெழுதப்பட்டுள்ளது. ஆண்டவன் திருவுள்ளத்திற்கு உகப் பாயிராது. ஏனெனில் ஸ்ரீராமாநுஜன் 221ல் நாமெழுதியிருந்தோம்—"நம் ஆண்டவன் உபயவேதாந்தங்களிலும் நல்விரகர்; ஆயினும் பகவத்விஷய ப்ரவசனங்களில் அஸாதாரண மான அபிநிவேசம் கொண்டவர். த்ராவிடவேதாந்தத்தை வலக்கண்ணுகவும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தை இடக்கண்ணுகவுங்கொண்டவர்; அத்தகைய ஸ்ரீஸ்வாமியின் மஹோத் ஸவத்திற்காக நடைபெறும் ஸதஸ்ஸில் உபயவேதாந்த ப்ரவசனமும் நடைபெற ப்ராப்தம்'' என்று. மேலும் மிக முக்கியமான சில வார்த்தைகளும் எழுதியிருந்தோம். அந்த பத்ரிகையை ஸ்ரீரங்க வாஸியான ஒரு வித்வான் மூலமாக ஆண்டவன் ஸந்நிதியில் ஸமர்ப்பித்து விசிஷ்ய விஜ்ஞாபிக்கவும் செய்திருந்தோம். அப்போது ஆண்டவன் "என் மனோரதமும் இதுவே; ஆனுல் அதிகாரி தௌர்லப்யம் அத்யந்த சோசநீயம், இந்த மனோரதம் நிறைவேறுது'' இத்யாதிகள் ஸாதித்ததாக அன்றேயறிந்தோம். ❋

ஸூ. அந்தர உபபத்தே: 1—2—13.

அந்தர:—கண்களினுள்ளே யிருப்பவன், (ஸ:)—அந்த பரமபுருஷனே; உபபத்தே:—அங்குச் சொல்லப்பட்டிருக்கிற அபயத்வம் அம்ருதத்வம் முதலானவை அப்பரமபுருஷனிடத்திலேயே பொருந்தக் கூடியவையாதலால், என்பது ஸூத்ரத்தின் பொருள்.

ச்சாந்தோக்யோபநிஷத்தில் உபகோஸலவித்யாப்ரகரணத்தில் *ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருச்யதே: ஏஷ ஆத்மேதி ஹோவாச, ஏததம்ருதம் ஏததபயம் ஏதத் ப்ரஹ்ம* என்று ஓதப்பட்டுள்ளது. அங்கு *அக்ஷிணி புருஷோ த்ருச்யதே* என்பதனால் கண்ணிலுள்ளவனாக ஒரு புருஷன் ஏற்படுகிறான். அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் *யச் சக்ஷுஷி திஷ்டந் சக்ஷுஷோந்தர:* என்ற வாக்யத்தினால் கண்ணிலுள்ளவனாகவும் நியாமகனாகவும் ஓதப்பட்ட பரமபுருஷன் அந்த *ய ஏஷ:* இத்யாதி வாக்கியத்தினால் நினைப்பூட்டப் படுகிறான். ஆகவே அக்ஷிபுருஷன் பரமபுருஷனாகவே யிருக்கத்தக்கவன் என்றதாயிற்று. .... ... ... (14)

அந்தராதிகரணம் முற்றிற்று.

## 15. வைச்வாநராதிகரணம்.

ச்சாந்தோக்யத்தில் வைச்வாநரவித்யா ப்ரகரணத்தில் (5–11–1.) "கோ ந ஆத்மா? கிம் ப்ரஹ்ம?" என்று தொடங்கி "ஆத்மாநமேவ ஏநம் வைச்வாநரம் ஸம்ப்ரதி அத்யேஷி தமேவ நோ ப்ரூஹி" என்று வினவும், (5–18–1.) "யஸ்த்வேதமேவம் ப்ராதேசமாத்ரம் அபிவிமாநமாத்மாநம் வைச்வாநர முபாஸ்தே" என்று விடையும் காணப்படுகிறது. இவ்விடத்தில் பரமாத்மாவையே வைச்வாநரசப்தத்திற்குப் பொருளாக் நிர்ணயிக்க முடியுமா முடியாதா? என்று ஸந்தேஹம். இங்குப் பூர்வபக்ஷம்=வைச்வாநர சப்தத்திற்கு நான்கு பொருள்கள் காணப்படுகின்றன; அக்நி, மஹாபூதங்களில் மூன்றாவதான பூதம், தேவதாவிசேஷம், பரமாத்மா — ஆக இந் நான்கு பொருள்களில் வைச்வாநர சப்தப்ரயோகம் ஆங்காங்குக் காணப்படுகிறது. இந்த ப்ரகரணத்தில் பரமாத்ம பரமாகவே நிர்ணயம் செய்ய ஆவச்யகதை யில்லாமையாலே முடியாதென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக,

இதன்மேல் ஸித்தாந்தம் இங்ஙனே யாகிறது.

ஸூ. வைச்வாநரஸ் ஸாதாரணசப்தவிசேஷாத். 1—2—25.

ஸாதாரணசப்தவிசேஷாத் வைச்வாநர: பரமாத்மா — ஸாதாரணமான வைச்வாநரசப்தத்தைப் பரமாத்மஅஸாதாரண தர்மங்களினால் விசேஷித்திருப்பதனால் இங்கு வைச்வாநரசப்த வாச்யன் பரமாத்மாவே யாகக்கடவன் என்று பொருள் தேறிற்றாயிற்று. தொடங்கும்போது *கோ ந ஆத்மா? என்று ஸகல ஜீவாத்மாக்களுக்கும் ஆத்மாவாயிருப்பவன் யாவனென்று ஜிஜ்ஞாஸையை வெளியிட்டு *யஸ் து ஏதமேவம் ப்ராதேசம் அபிவிமாநமாத்மாநம் வைச்வாநரமுபாஸ்தே ஸ

ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஷு ஆத்மஸு அன்னமத்தி* என்று, வைச்வாநரோபாஸகனுக்குப் பரமபோக்யமான பரப்ரஹ்மத்தின் அநுபவம் பலனாக ஓதப்பட்டிருப்பது காண்கிறது. ஸகல லோகங்களிலும் ஸகல பூதங்களிலும் ஸகலாத்மாக்களிலும் இருப்பதான [யத் அந்நம்] பரம போக்யமானயாதொரு பரப்ரஹ்மமுண்டோ, [தத் அத்தி] அதை யனுபவிக்கிறான் என்று அந்த ச்ருதிக்குப் பொருள். அத்யதே இதி அந்நம் = அநுபவிக்கப்படுகிறது; போக்யமாகக் கொள்ளப்படுகிறது என்றவாறு. *ரஸோ வை ஸ:; ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி* என்று தைத்திரீயோபநிஷத்தில் ஓதப்பட்ட பரப்ரஹ்மாநுபவமே இங்கு ஓதப்பட்டதாகிறது. முமுக்ஷுக்களுக்கு ஹேயமான ப்ராக்ருதமான அந்நமன்று இங்கு அந்நமத்தி என்பதனால் விவக்ஷிதம்.

மேலும் *தத் யதா இஷீகதூலம் அக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத, ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே* என்று வைச்வாநராத்மோபாஸகனுக்கு ஸகல பாபங்களும் தொலைவது பலனாகச் சொல்லப் பட்டுள்ளது; வைச்வாநராத்மாவுக்கு த்யுலோகம் முதலான த்ரைலோக்யத்தையும் சரீரமாகவுடைமையும் சொல்லப்பட்டுள்ளது; ஆக இத்தகைய அஸாதாரண தருமங்களினால் வைச்வாநராத்மா பரமாத்மாவே யென்று நிர்ணயிக்கக் குறையில்லை. இந்த வைச்வாநரசப்தம் ஜாடராக்நிபரமென்று சங்கிப்பதற்கு ஸ்வல்பஹேது இருந்தாலும், *ஸ ஏஷோக்நிர் வைச்வாநரோ யத்புருஷ:* என்று நிருபாதிக புருஷசப்த வாச்யத்வம் இங்கு ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருக்கையாலே இது ஜாடராக்நிக்கு அஸம்பாவிதம். த்ரைலோக்ய சரீரகத்வமும் அஸம்பாவித மென்பது புநருக்தம். ஜாடராக்நி விஷயகமாகத் தோன்றுகிற அக்நிசப்தமும் தச்சரீரக பரமாத்மபரமாகவே கொள்ளப்படவேணும்; ஏனென்னில், அதனிடத்தில் அஸம்பாவிதமான தருமங்கள் ஓதப்பட்டிருக்கையினாலே. *பகவாநிதி சப்தோயம் ததா புருஷ இத்யபி, நிருபாதீ ச வர்த்தேதே வாஸுதேவே ஸநாதநே* என்கிற ப்ரமாணமானது நிருபாதிகமான புருஷசப்தம் பரமாத்மாவுக்கு அஸாதாரணமென்று திடப்படுத்தியிருக்கையாலே *ஸ ஏஷோக்நிர் வைச்வாநரோ யத் புருஷ:* என்கிற ச்ருதிவாக்யம் ஜாடராக்நியை வ்யாவர்த்தித்தே தீரும். ஆக அக்நிசப்த ஸாமாநாதிகரண்யமானது வைச்வாநரத்துக்கு பரமாத்மத்வத்தை நிர்ணயிப்பதில் விரோதியாக ஆகமாட்டாது. தச்சரீரகத்வேந பரமாத்மோபாஸநம் இங்கு விதிவிஷயமென்று கொள்ளக்கடவது.

(விசேஷக்குறிப்பு.) இவ்வதிகரணத்தில் *ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி:* என்கிற இருபத்தொன்பதாவது ஸூத்ரம் வேதாந்திகளால் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்கது. அக்நி வைச்வாநராதி சப்தங்களெல்லாம் தத்தச் சரீரகத்வேந பரமாத்மாவைத் தெரிவிப்பதாகக் கொள்ளுகிற ஒரு ப்ரகாரமிருக்கட்டும்; [ஸாக்ஷாதபி அவிரோதம் ஜைமிநிராசார்யோ மந்யதே.] அக்நிசப்தத்திற்கு (அக்ரம் நயதி) என்று வ்யுத்பத்தி கொண்டால் ஸாக்ஷாத்தாகவே பரமாத்மாவைச் சொல்லுமென்னத் தட்டில்லை. அபர்யவஸாநவ்ருத்த்யா பரமாத்மபர்யந்தத்வம் கொள்ளுவதிற்காட்டிலும் ஸாக்ஷாத்தாகவே கொள்ளக் கூடிய விடங்களில் இங்ஙனே கொள்ளலாமென்பதை ஸூத்ரகாரர் காட்டினாராயிற்று. சசீபதி: இத்யாதி

விசேஷண யோகமில்லாத இந்த்ரசப்தம் காணுமிடங்களில் "இதி-பரமைச்வர்யே" என்பதைக் கொண்டு பரமேச்வரனை பரமாத்மாவை அர்த்தமாகக் கொள்ளுவதில் அஸம்பாவிதத்வ மொன்று மில்லையன்றோ. இங்ஙனே பலவுங்காண்க. (15)

வைச்வாநராதிகரணம் முற்றிற்று.

## 16. பூமாதிகரணம்.

### ஸூ. பூமா ஸம்ப்ரஸாதாத் அத்யுபதேசாத். 1-3-7.

ச்சாந்தோக்யத்தில் ஓதப்படும் வாக்யமொன்று *யத்ர நாந்யத் பச்யதி நாந்யத் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா; அத யத்ர அந்யத் பச்யதி அந்யத் ச்ருணோதி அந்யத் விஜாநாதி தத் அல்பம்* என்பதாக. (இதன் பொருளாவது) எந்த வஸ்து அநுபவிக்கப்படும்போது வேறு எந்தவஸ்துவையும் கண்கொண்டு காணமாட்டானோ, காதுகொண்டு கேட்கமாட்டானோ அறியவேமாட்டானோ அது பூமா; எந்த வஸ்து அநுபவிக்கப்படும்போது வேறு வஸ்து கண்ணுக்கும் காதுக்கும் அறிவுக்கும் விஷயமாகுமோ, அது அல்பம்—என்பதாம். இங்கு (பூமா) என்பது இமநிச்ப்ரத்யயாந்தமான சப்தமாதலால் 'பஹோர்பாவ:-பூமா' என்கிற வ்யுத்பத்தியினால் பஹுத்வமென்று பொருள் பெற்றதாகிறது. எனவே தர்மபரமான சப்தமிது என்று தேறிற்றாகிறது. ஆனாலும் மேலே *யத்ர அந்யத் பச்யதி... தத் அல்பம்* என்றிருப்பதனாலே அல்ப சப்தம் தர்மிபரமேயொழிய தர்மபரமல்லாமையாலே அதற்கு ப்ரதியோகியான (பூமா) என்பதும் தர்மிபரமாகவே கொள்ளத்தக்கதாகும். பெருமை என்று பொருளன்றிக்கே பெரிது என்று பொருள் தேறிற்றாகிறது. இந்த ப்ரகரணத்தில் *தரதி சோகமாத்மவித்* என்று தொடங்கி பூமவிஜ்ஞானத்தை யுபதேசித்து *ஆத்மைவ இதம் ஸர்வம்* என்று ஆத்மாவையிட்டே உபஸம்ஹரித்திருக்கையாலே (பூமா வென்று) மஹத்தாகச் சொல்லப்படுகிறவஸ்து ஆத்மாவென்று தேறுகிறது. இப்படி பூம குணவிசிஷ்டமாகச் சொல்லப்படுகிற ஆத்மா ப்ரத்யகாத்மாவா? பரமாத்மாவா? என்று ஸம்சயமுண்டாமளவில், ப்ரத்யகாத்மா வென்று பூர்வபக்ஷ முண்டாகிறது. ஏனென்னில்; *ச்ருதம் ஹ்யேவ மே பகவத்த்ருசேப்யஸ் தரதி சோகமாத்மவித்* என்று ஆத்ம ஜிஜ்ஞாஸையினால் வந்து பணிந்த நாரத மஹர்ஷியின் பொருட்டு நாமம் முதல் ப்ராணமளவும் உபாஸ்யங்களாக ஸநத்குமாரரால் உபதேசிக்கப்பட்டவிடத்து *அஸ்தி பகவோ! நாம்நோ பூய:?. அஸ்தி பகவோ வாசோ பூய.? [நாமத்துக்கு மேற்பட்டதுள்ளதா? வாக்குக்கு மேற்பட்டதுள்ளதா]? இத்யாதிகளான வினக்கள் செல்வதையும், *வாக் வாவ நாம்நோ பூயஸீ; மநோ வாவ வாசோபூய:* [நாமத்திற்காட்டிலும் வாக்கு மேம்பட்டது; வாக்கைக் காட்டிலும் மநஸ்ஸு மேம்பட்டது] இத்யாதிகளான விடைகள் செல்வதையும் காணாநின்றோம். இங்ஙனே காண்பது ப்ராணனுக்குக் கீழ்ப்பட்டவரையிலுமே. ப்ராணனைச் சொல்லியான பிறகோவென்னில் வினவுமில்லை, விடையுமில்லை. ஆகவே இந்த ஆத்மோபதேசமானது ப்ராணபர்யந்தமே யென்று தெரிகிறது. ஆகவே இங்கு ப்ராண சப்தநிர்திஷ்டன் ப்ராணஸஹசாரியான ப்ரத்யகாத்மாவேயொழிய

வாயுவிசேஷமாத்திரமன்று. மேலும் *ப்ராணோ ஹ பிதா ப்ராணோ ஹ மாதா* இத்யாதி வாக்யங்களும் ப்ராணனை சேதந வஸ்துவாகத் தெரிவிக்கின்றன. 'பூமா' என்று பெரிதாகச் சொல்லப்பட்ட வஸ்து இந்த ப்ராணனே யாகும். ஆக ப்ரத்யகாத்மாவே இங்கு பூமசப்த நிர்திஷ்டனாகக் கடவன்—என்று பூர்வபக்ஷம்;

இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு;—[ஸம்ப்ரஸாதாத் அத்யுபதேசாத்] பூமா என்று அநல்பனாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவேயாவன்; (ஏனென்றால்;) ஸம்ப்ரஸாதாத்—ஜீவாத்மாவைக் காட்டிலும், அதி—அதிகமாக (அர்த்தாந்தரமாக), உபதேசாத்—தெரிவிக்கப்படுகையாலே என்று ஸூத்ரத்திற்குப் பொருள் காண்க. ச்சாந்தோக்யத்தில் (8-12-2.) * ஏஷ ஸம்ப்ரஸாதோ ஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே* என்கிறவிடத்தில் ஜீவாத்மவாசகமாக ஸம்ப்ரஸாத சப்தமிருப்பதனால் உபநிஷத்ப்ரஸித்திகொண்டு இங்ஙனே பொருளுரைக்கப்பட்டது. இது நிற்க. ச்சாந்தோக்யத்தில் (7-15-1) *ப்ராணோ வா ஆசாயா பூயாந்* என்று ப்ரத்யகாத்மாவை ஆசையினும் அதிகனாகச் சொல்லி மேலே *ப்ராணோ ஹ்யேவைதாநி ஸர்வாணி பவதி ஸ வா ஏஷ ஏவம் பச்யந் ஏவம் மந்வாந ஏவம் விஜாநந் அதிவாதீ பவதி, தஞ்சேத்......நாபஹ்நுவீத* என்று பதினைந்தாவது கண்டம் தலைக்கட்டப்பட்டது. இங்கு *அதிவாதீ பவதி* என்றதற்குப்பொருள்யாதெனில்; தான் உபாஸிக்கும் வஸ்துவை உத்க்ருஷ்டமாகச் சொல்லுகிறானென்பதாம். இது உபாஸ்யதேவதையின் அதிசயத்தில் பர்யவஸிப்பதாம்; அதாவது, தன்னாலே உபாஸிக்கப்படும் வஸ்து ஸர்வோத்க்ருஷ்டமானது என்று சொல்லுபவன் என்றது அந்த உபாஸ்ய வஸ்து உண்மையில் உத்க்ருஷ்டமானது என்று தெரிவித்தவாறும். இவ்விடத்தில் (7-16-1) *ஏஷ து வா அதிவததி யஸ் ஸத்யேந அதிவததி* என்றவாக்கியம் உற்று நோக்கத்தக்கது. இதில் (து) என்பது இருப்பதனாலே இதரவ்யாவர்த்தகமான அந்த துகாரம் வேறொரு அதிவாதியிருப்பதாகக் காட்டிக்கொடுத்து, *யஸ் ஸத்யேநாதிவததி யென்று ஸத்யசப்தவாச்யமான பரப்ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்கு மேலும் அதிசயிதமான அதிவாதித்வத்தைச்சொல்லி, அவனுடைய அதிவாதித்வத்திற்கு அடியானதும் ஸத்யசப்தவாச்யமானதும் ப்ரத்யகாத்மாவிற்காட்டிலும் வேறுபட்டதுமான பரப்ரஹ்மத்தை * ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம் * [ஸத்யசப்தவாச்யமான ப்ரஹ்மமே உபாஸிக்கத்தக்கது] என்று ஸநத்குமாரர் உபதேசித்துத் தலைக்கட்டியிருக்கின்றார். இங்கு முந்தின பர்யாயங்களில் சொல்லப்படாத அதிவாதித்வம் சொல்லப் பட்டிருக்கையாலே, உபக்ராந்தமான ஆத்மோபதேசம் ப்ராணசப்த வாச்யமான ப்ரத்யகாத்மாவில் தலைக்கட்டிற்றென்று 'ப்ராணத்திற்காட்டிலும் மேம்பட்டது உள்ளதா?' என்று நாரதர் கேளாதிருக்கவும் ஸநத்குமாரர் தாமாகவே அதிலும் மேம்பட்ட பரமாத்மாவை உபதேசிக்கிறார்—*ஏஷ து வா அதிவததி யஸ் ஸத்யேநாதிவததி யென்று. *ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம* இத்யாதிகளில் ஸத்ய சப்தவாச்யத்வம் பரப்ரஹ்மத்திற்கு ப்ரஸித்தம். 'ஸததைகரூபத்வேந நிர்விகாரத்வாத் ஸத்யத்வம்' என்று வேதாந்திகளின் கோஷ்டிகளில் ப்ரஸித்தமானதே. ஆக பூமசப்தவாச்யன் ப்ரத்யகாத்மாவல்லன், பரமாத்மாவே யென்று ஸித்தாந்திதமாயிற்று. .... .... .... ....

(16)

பூமாதிகரணம் முற்றிற்று.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

மிக முக்கியமான அறிவிப்பு:—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA
L. KANCHEEPURAM.




366. Sri Vangeepuram Raghavacharya,
MELKOTE (Mysore State)



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street. L. Kanchipuram.